அன்னை கஸ்தூரி ஹிந்துப்பெண் களுக்கு ஒரு சிறந்த உதாரணம். பண்டைய கற்பரசிகளிலே ஒருவ ராக வைத்து எண்ணத்தக்க உத்தமி. அவருடைய வாழ்க்கை மிக்க உருக்க மானது. அதைச் சுருக்கமாக விளக்கு கிறது இந்நூல்.

இது மின்னொளியின் நான்காவது பிரசுரம்

முதல் பதிப்பு மார்ச்சு 1944



விலை அணா எட்டு

ஒரு சிறு அகல்விளக்கு எரிகிறது. அதன் ஜோதி காற்றிலே நடுங்குகிறது. ஆனால், கொஞ்சங் கொஞ்சமாக வலுப்பெற்று, ஒரே மாதிரியாக, நிலையாக, நின்று எரியும் தன்மையடைகிறது. ஒரு சொட்டு எண்ணெய் மீதியிருக்கும் வரை, மனத்தில் வஞ்சகம் இல்லாமல், இருளை நீக்கி ஒளியைக் காட்டுகிறது. மின்சார விளக்கைப் போல, கண்ணைப் பறிக்கும் ஜோதி அதனிடம் இல்லை. கண்ணுக்குக் குளிர்ச்சியாக, எவ்வளவு நேரம் வரை அருகே உட்கார்ந்திருந்தாலும் மனத்திற்கு இன்பம் விளைவிக்கத்தக்க எளிய, சுதந்தரமான, அமரஜோதியாய் விளங்குகிறது. திடீரென்று ஒருநாள் எண்ணெய் முழுவதும் காலியாகிறது. ஜோதி மெய்சிலிர்த்து நடுங்கியவாறு அணைகிறது. உடனே, எங்கும் ஒரே அந்தகாரம், சூனிய உணர்ச்சி உலகெங்கும் பரவுகிறது.

அந்த அகல் விளக்கைப் போன்றதே கஸ்தூரிபாயின் வாழ்க்கை.

முதலில் சிஷ்யரை இழந்தார் காந்திஜி. இப்போது மனைவி, வாழ்க்கைத் துணைவி, வாழ்க்கைப் பாதையிலே கடைசிவரை ஒன்றாக நடந்துவந்து தொண்டாற்றுவதாகக் கங்கணம் பூண்ட மனைவியையும் இழந்தார்.

இறந்துபோகிறவர்கள் அதிர்ஷ்டக்காரர்கள். அவர்கள் துன்பமயமான இவ்வுலகத்திலிருந்து மறைந்து போகிறார்கள். ஆனால், உயிரோடிருப்பவர்களுக்கு ஏக்கத்தையும் கண்ணீரையும் வைத்து விட்டுப் போகிறார்கள்.

### பழுத்த பழம்

சில நாட்களுக்கு முன், காந்திஜி தம்முடைய மனைவியைப் பற்றி ஒரு நண்பரிடம் கூறியபோது, "அவளுடைய சக்தி வரவரக் குன்றுகிறது. அவள் பழுத்த பழம் போலாகி வருகிறாள். அந்தக் கனி கிளையிலிருந்து எப்போது கீழே விழப்போகிறதோ? அவள் ஆண்டவன் திருவடியில் போய்ச் சேருவாளாக!" என்றார். இந்தியப் பெண்களுக்கு

உதாரணமாய் விளங்கிய ஒரு கனி, வாழ்க்கை என்னும் மரத்திலிருந்து கீழே விழுந்துவிட்டது. சுதந்தரமற்ற தொரு சிறைக்கூடத்திலிருந்து தப்பி, சுதந்தரமயமான ஒரு பொன்னுலகத்துக்கு அவர் போய்விட்டார்.

வாழ்க்கை விநோதமானதென்று பெரியோர்கள் சொல்லுவதில் எவ்வளவு உண்மை இருக்கிறது! "இறுதி யில், கடவுள்தான் என் தாயாருக்கு விடுதலையளித்தார்" என்று ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறுகிற மாதிரி, ராஜாஜி—சாப்ருபோன்ற சமாதானத் தூதர்களுக்குத் திறக்காத சிறைவாயில், எமனுக்குத் திறந்தது! இந்திய தேசிய சரித் திரத்திலே, மிக முக்கியமான பகுதியிலே, எழுபத்தைந்து வருஷகாலம் வாழ்ந்த அந்த வயோதிக மாது கஸ்தூரிபாய் மறைந்தார்.

**மௌனம் என்ற மாயாவி**

மௌனம் என்ற ஒரு மாயாவி, கஸ்தூரிபாயின் வாழ்க்கையிலே புகுந்து ஒரு சதி செய்திருக்கிறுன். கஸ்தூரி பாயைப்பற்றி இன்று உலகத்தாருக்குத் தெரிந்தது மிக மிகச்சொற்பம். அவருடைய சேவையும் தியாகமும் இமய மலையின் அடிவாரம்போல யாருடைய கண்ணிலும் படா மல் நிலவுகிறது. காந்திஜி தம்முடைய சுய சரித்திரத்தில் அவரைப்பற்றி ஓரளவு குறிப்பிட முயலுகிருர். ஆனல், அங்கு அவரும் மௌனத்துடன் தோழமை பூண்டு, சொந்த வாழ்க்கையைப்பற்றி ஒன்றும் கூருமல் பட்டும் படாதது மாக விட்டுவிடுகிருர். ஒரே ஒரு மனிதர் இருந்தார். அவர் இப்போது இருந்திருந்தால், அன்னை கஸ்தூரியின் உருவத் தையும் குணநலத்தையும் எழுத்தோவியமாகப் புனைந்து கொடுத்திருப்பார். ஆனல், மகாதேவ தேசாய் என்ற அம் மனிதர் இன்று இல்லை. அவர் கஸ்தூரிபாயை முந்திக் கொண்டார்.

உலக பந்தங்களைத் துறந்து, இமயமலையிலே தவம் புரி யும் யோகி போல, விளம்பரப் பற்றை யொழித்து வாழ்ந் தார். ஒரு வகையில் பார்க்கப்போனல், அவருடைய வாழ்க்கையிலே படர்ந்திருக்கும் அமைதி, மௌனம் அவ ருடைய பெருமையை அதிகரிக்கிறது. முகஸ்துதியையோ,

கரகோஷத்தையோ விரும்பாமல் பெரியவர் என்ற புகழ் பெற்றவர் அவர்.

குற்றம் புரிந்த மகனை ஏறிட்டும் பார்க்கவில்லை தந்தை. ஆனால், தாய் வாரியணைத்துக் கொண்டார். தினசரி வாழ்க்கையிலே கவலையற்று, பூலோகத்தையே மறந்து, அன்பு முழுவதையும் மனித குலத்துக்குச் சொரிந்து நிற்கும் ஒரு பெரிய மகானைத் திருப்தி செய்வதற்காக, குடும்ப சுகங்களையும் நியதிகளையும் துறக்கத் துணிந்த அவர்மேல் யாருக்குத்தான் அநுதாபம் ஏற்படாதிருக்க முடியும்? ஆரம்பத்தில் அவர்களுடைய இல்வாழ்க்கை இன்பமாக நடந்து வந்தது. கணவனும் குடும்பமுமே உலகம் என்று கருதினார் கஸ்தூரிபாய். ஆனால், என்ன கெட்ட காலம்! அமைதியாக நடந்துவந்த இல்வாழ்க்கை குலைவுற்றது. கணவருடைய பெயர் கட்டுகளையும் வரம்புகளையும் மீறி வெளியே எதிரொலிக்கத் தொடங்கியது. மக்கள் அவரை அம்பலத்துக்கு இழுத்தார்கள். அதிலிருந்து, அவர் என்ன சொன்னாரோ, என்ன செய்தாரோ—எல்லாம் பொதுச் சொத்தாயிற்று. அதில், தனக்கோ குழந்தைகளுக்கோ யாதொரு விதமான சம்பந்தமும் இல்லை என்று ஆயிற்று. கணவருடைய பெருமையிலே அவரும் பங்குகொண்டு தலை நிமிர்ந்து நடந்தார். ஆனால், தனிப்பட்ட முறையில் தனக்கு நேர்ந்த ஒரு பெரிய நஷ்டத்தை நினைத்து நினைத்து இரகசியமாகக் கண்ணீர் சிந்தினார். இனி அவர் தனக்கு உரியவர் அல்லர்; தேசத்தின் பொதுச்சொத்தாய் விட்டார் என்பது தெரிந்ததும் மனத்தில் ஓர் அமைதி தோன்றியது.

## புடம்போட்டு எடுத்த சொக்கத் தங்கம்

அவர் மகானைக் கல்யாணம் செய்துகொண்டார். ஒரு மகாபுருஷனின் மனைவியா யிருக்கத்தக்க முறையில் தன்னைத்தானே மாற்றிக்கொண்டார். ஆனால், அது எளிதில் கிட்டவில்லை. வெகுகாலம் அமைதியாகச் சேவை செய்யவேண்டி நேர்ந்தது. அவர் தியாகம் எனும் நெருப்பிலே புடம்போட்டு எடுத்த சொக்கத் தங்கம். காந்திஜி கேட்டதை எல்லாம், அவர் இல்லை யென்னாமல் கொடுத்தார். ஓயாத தியாகம் என்னும் செங்குத்தான பாறையிலே,

அன்னை கஸ்தூரிபாயின் பாதங்கள் ஒரு போதும் பதற வில்லை, சறுக்கியதும் இல்லை.

ஒரு மகாபுருஷனை மணப்பது எளிதல்ல. அதனுல், தனிப்பெருமை எதுவும் கிடைத்துவிடாது. பெரிய பெரிய மகான்களின் மனைவியாக வாழ்ந்த பல பெண்கள் கண வன் விருப்பத்திற்கேற்ப நடந்துகொள்ள முடியாமல் திண்டாடினர். புருஷனின் குணத்திற்கும் போக்கிற்கும் ஏற்றமுறையில் தங்களைத் திருத்திக்கொள்ள அவர்களால் முடியவில்லை. ஆனல், இந்த விதிக்கு யாராவது ஒருவர் புறம்பாக நின்று, வெற்றிகரமாக வாழ்ந்திருக்கிருர் என் ருல் அவர் அன்னை கஸ்தூரிபாயேயாகும்.

### சமையல் வேலை பார்க்கும் எளிய மாது

அவர் ராணிகளுக்கெல்லாம் மகாராணி போன்றவர். கர்வமற்றவர், ஆனல் சுயமதிப்பை விட்டுக்கொடாதவர். மென்மையான சாதுவான தோற்றம்; ஆனல் உறுதியான வீராங்கனை. அவருடைய மனதிற்குள்ளே புகுந்து பார்க் கும் திறமை யாருக்காவது இருக்குமானல், அது துன்பத் தாலும் இன்னல்களாலும் விண்டு விண்டு தெறித்துப் போயிருப்பது நன்கு தெரியும். ‘ஆனல், அவருடைய முகம் மாத்திரம் தியாகத்தின் பிரதிபிம்பமாக விளங்கியது. அவர் இந்தியப் பெண்களுக்கு உதாரணம், உருவகம். செயற்கை வைரத்தைப்போலப் பளபளப்போ பகட்டோ அற்ற இயற்கை வைரம்.

சேவை, தியாகம், துன்பம் வேதனை முதலியனவே பெண்களுக்குக் கிடைக்கும் செல்வம். இரவும் பகலும் கணவனுடைய சுகத்திலேயே கண்ணுங் கருத்துமாய் இருக்கவேண்டும் என்பது ஹிந்து தர்மமுறை. உலகத்திற்கு உழைக்க வேண்டியது கணவனின் கடமை. ஆனல், கணவனுக்கு உழைக்கவேண்டியது மனைவியின் கடமை. மகாத்மாஜி சுற்றுப் பிரயாணத்திற்காக வெளியே கிளம்பியதும், அவரைக் காண்பதற்காக உலகமே திரண்டு ஓடிவருகிறது; கடவுளைப்போல நினைத்து, அவருக்கு வந்தனை வழிபாடுகள் செய்கின்றனர். பிருந்தா வனத்தில் கண்ணனைக் கண்டதும், கோபிகையர்கள்

தன்னிலே மறந்து இன்பத்தில் ஆழ்வதுபோல, மக்கள் காந்திஜியைக் கண்டதும் மெய்மறந்து அவருடைய வடிவிலே மயங்கி நிற்கின்றனர். நூற்றுக்கணக்கான மோட்டார்கள் அவரைப் பின்தொடர்ந்து செல்லுகின்றன. பெண்கள் வைரங்களையும் முத்துக்களையும் பொற்காப்புக்களையும் அவருக்குக் காணிக்கையாக அளிக்கின்றார்கள். தெளிவான இனிமையான அவருடைய குரலோசையைக் கேட்பதற்காக மக்கள் பொறுமை இழந்து தவிக்கின்றனர். தெய்வங்களும் பொறாமைகொள்ளக்கூடிய முறையில் நன்கு அலங்கரிக்கப்பட்ட மேடைமேலேறி, அவர் சில வார்த்தைகள் பேசுகிறார். எங்கு பார்த்தாலும் "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற கோஷம் கிளம்புகிறது. அச் சமயத்தில், அந்த மகாத்மாவின் மனைவி, வாழ்க்கைத் துணைவி, எங்கே யிருக்கிறார் — என்ன செய்துகொண்டிருக்கிறார் என்பது யாருக்குத் தெரியும்? அவர் காந்திஜியின் கூடாரத்தில் அமர்ந்து,சமையல் செய்துகொண்டிருக்கிறார்! கணவருடைய களைப்பைப் போக்க என்னென்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்!

**'மனைவியல்ல, தாய்!'**

பதினைந்து வருஷங்களுக்கு முன் காந்திஜியும் அன்னை கஸ்தூரியும் இலங்கைக்குச் சென்றிருந்தனர். அழகிய அந்தத் தீவு முழுவதையும் சுற்றிப் பார்த்தனர். அப்போது ஒரு சிங்களவர் காந்திஜியை அணுகி, கஸ்தூரிபாயைக் குறிப்பிட்டு, "இவர் யார்? உங்கள் தாயாரா?" என்று வினவினர். காந்திஜி சிரித்துக்கொண்டே "ஆம்" என்றார்.

மறுநாள் ஒரு பெரிய பொதுக்கூட்டத்தில் பேசும்போது, காந்திஜி பின்வருமாறு கூறினர்:

"நேற்று ஓர் அன்பர் தவறுதலாக, கஸ்தூரிபாயை என்னுடைய தாயாராக நினைத்துவிட்டார். எங்களிருவரைப் பொறுத்தவரையில், இந்தத் தவறு மன்னிக்கத்தக்கது மட்டுமல்ல; மனதிற்குகந்ததுமாகும். அவள் மனைவி ஸ்தானத்தைவிட்டுப் பல வருஷங்களாகின்றன. ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன், நான் பெற்றோரை

இழந்து அநாதையானேன். கஸ்தூரிபாய் எனக்குத் தாயானுள். அவள் தாயாகவும், நண்பனுகவும், செவிலி யாகவும், சமையல்காரனுகவும் பலவகையில் எனக்குப் பணியாற்றி வருகிருள். எனக்குக் கிடைக்கும் புகழிலும் மரியாதையிலும் சமபங்கு பெறவேண்டுமென்று நினைத்து அவளும் வெளியே வந்திருந்தால், நான் என்னுடைய சோற்றுக்கும் இதர வசதிகளுக்கும் அலைந்து திரியவேண்டி நேர்ந்திருக்கும். ஆகையால், நாங்கள் எங்களுக்குள் ஓர் ஒப் பந்தம் செய்துகொண்டோம். அதன்படி, புகழையும் மரி யாதையையும் நான் அனுபவிக்கிறேன்; குற்றேவல்களை யும் அடிமைப்பணிகளையும் அவள் செய்துவருகிருள்.''

## ஈடு இணையற்ற தியாக வாழ்வு

ஆண்மகன், வாழ்க்கையில் தனக்கு நேரும் எல்லாத் தோல்விகளுக்கும் அதிர்ஷ்டத்தின்மேல் பழியைப்போட்டு விட்டு உறங்கப்போகிருன். அவன் தன்னுடைய சோம் பேறித்தனத்துக்கு ஆதாரம் காட்டுவதற்காக, தர்க்க விவாதம் செய்து மற்றவர்கள் வாயை மூடுகிருன். ஆனல், பெண் தன் வாழ்க்கைக்குப் பிரம்மாவாக ஒரு நாயகனைக் கைப்பிடித்ததும், அவனுடைய திறமை முழுவதும் உலகத் துக்கு வெளியாகி, அதன் மூலம் தானும் தன் மக்களும் சுகபோகத்தில் ஆழ்ந்திருக்கவேண்டுமென்று விரும்புவது இயற்கையல்லவா? அன்னை கஸ்தூரியும் அதற்கு விதி விலக்காக முடியுமா? பாரிஸ்டர் காந்தியும் தானும் விலை யுயர்ந்த ஒரு மோட்டாரில் உல்லாசப் பிரயாணம் செய்ய வேண்டுமென்று அவர் நினைத்திருக்கலாம். போர்பந்தர் சமஸ்தான திவானின் புதல்வர் ஒரு பெரிய சமஸ்தானத் துக்கு அதிபதியாக வருவார் என்றும் அவர் கனவு கண் டிருக்கலாம். கணவர் வக்கீல் தொழிலில் பெரும் புகழும் பெற்று நீதிபதியாக வருவார்; தான் நீதிபதியின் மனைவி என்ற பேர்வாங்கலாம் என்றும் அவர் எண்ணியிருக்க லாம். அந்த எண்ணங்களையும் சிந்தனைகளையும் ஒழிப்பதற் காக அவர் மனதிற்குள்ளாக எத்தனைமுறை போராட வேண்டி நேர்ந்ததோ, யாருக்குத் தெரியும்? கஸ்தூரிபாய் செய்த தியாகத்தைப் பார்க்கப்போனல், சீதையும் நளா

யினியும் சாவித்திரியும் செய்த தியாகங்கள் அற்பமானவை யாகவே தோன்றுகின்றன.

சாரதாமணி தேவி, ஆரம்பத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தம் கணவராகக் கருதினர். அவர் தம்மைத் தவிர வேறு யாருக்கும் உரியவர் அல்லர் என்றும் எண்ணினர். அப் போது அவருக்கு மங்கைப்பருவம். காலங் கழிந்தது; இளமை மறைந்தது. ராமகிருஷ்ணர் இப்போது கணவ ராகத் தோன்றவில்லை; தேவனுகத் தோன்றினர். அவரை வழிபட்டுத் தொண்டு புரிவதையே தம்முடைய கடமை யாகக் கொண்டார் சாரதாமணி தேவி. அதேபோல, ஸ்ரீராம கிருஷ்ணரும், சாரதாமணியை, அன்னையாகத் தொழுது போற்றினர். இதை மனதில் நிலைநிறுத்திக்கொண்டு, மற் ருெரு பக்கம் பார்ப்போம்: திடீரென்று, ஒரு நாள் காந்திஜி முற்றிலும் மாறினர். தேசசேவகரானர். பிரமசரியத்தைக் கையாளுவ தென்று உறுதி பூண்டார். அன்றிருந்து, காந்தி தம்பதிகளின் உறவு, வேறு முறையில் மாறயது. குறுகிய சுயநல பந்தங்களை, காந்திஜி அறுத்தெறிந்தார். உலகத்தையே தம் குடும்பமாகவும் அதிலுள்ள மக்களையே தம் உறவினர்களாகவும் கொண்டார். கஸ்தூரிபாய், தம் முடைய கணவராகிய மோஹன்தாஸ் காந்தியை இழந்தார்; அதற்குப் பதிலாக, இதய முழுவதும் அன்பு மிக்க 'மகாத்மா' வைத் துணைவராகப் பெற்ருர்.

மோஹன்தாஸ் கரம்சந்திர காந்தி, மகாத்மா காந்தி யானதற்கு, கஸ்தூரிபாய் ஒரு முக்கியமான காரணம் என்பது வெளியுலகத்துக்குத் தெரியாது. காந்திஜியின் இன்பதுன்பங்களிலும், சத்தியத்தையொட்டி அவர் நடத் திய பற்பல போராட்டங்களிலும், அவர் சிறைச்சாலைக்குள் தவம் கிடந்தபோதும், புகழ்மாலையுடன் மலர்மாலை சூடி நின்றபோதும், முட்டை வீச்சுக்கு இலக்காகி வசைமாரி பெற்ற போதும், கஸ்தூரிபாய் ஓர் உறுதியான தளபதி போல் அவருக்குப் பக்கத்துணையாக நின்ருர்.

### காந்திஜியின் மற்ருெரு வடிவம்

இப்போது இறந்தவர் கஸ்தூரிபாய் அல்லர், காந்திஜியின் மற்ருெரு வடிவம். கஸ்தூரிபாயை நாம் பார்க்க வேண்டு

மானல், அறுபத்திரண்டு வருஷத்துக்கு முன் போகவேண்டும். அப்போது கஸ்தூரிபாய், பதின்மூன்று வயதுப் பெண்ணாகத் தெருவில் ஓடியாடித் திரிந்தாள். கல்யாண மானதும் கஸ்தூரிபாய் மறைந்தாள்; அதற்குப் பதிலாக 'மனைவி' என்ற பெயரில், காந்திஜிக்கு மற்றொரு வடிவம் தோன்றியது. அதுதான் 'கஸ்தூரிபாய்.' காந்தி என்ற ஜோதியில், கஸ்தூரிபாய் இரண்டறக் கலந்து விட்டார்; தேஜோ மயமான அந்த ஒளி வெள்ளத்திலே அவர் ஐக்கிய மாய் விட்டார். அவர் காந்திஜியின் நிழல். செயலிலும் சிந்தனையிலும் அவர் காந்திஜியைப் பின்பற்றினார். அவருக்கென்று சொந்தமாக நினைப்பதற்கோ, செய்வதற்கோ ஒன்றும் இல்லை.

சூரியனை ஆணாகவும் சந்திரனைப் பெண்ணாகவும் கூறுவது கவிகள் மரபு. காந்திஜியைச் சூரியனாகவும் கஸ்தூரி பாயைச் சந்திரனாகவும் நாம் கொள்ளலாம். சூரியன் ஒளிக்கடவுள். அதற்குமுன், வேறு எந்த ஒளியும் நிற்க முடியாது. ஆனால், சந்திரனுக்கு இயற்கை ஒளி இல்லை. அது சூரியனிடமிருந்து கிரகித்த ஒளியைப் பிரதிபலித்தே, உலகத்துக்கு வெளிச்சம் கொடுக்கவேண்டும். ஒரு காலத்தில் சந்திரனும் சூரியனைப் போலவே நெருப்பு மயமாய் இருந்தது. அது குளிர்ந்து குளிர்ந்து, தன்னியல் பழிந்த தியாகத்தினாலேயே, இன்று சூரியனின் கனல் கதிர்களைக் குளிர் வித்து வெளிவிடும் ரசவாதியாயிற்று. கஸ்தூரிபாயின் வாழ்க்கையும் அது போன்றதேயாகும்.

**'உயிரோடு திரும்பேன்'**

கஸ்தூரிபாயின் மறைவு, பழைய விஷயம் ஒன்றை நினைவுறுத்துகிறது. காந்திஜிக்கு முன், தான் இறந்து போகவேண்டும் என்று அவர் மிக்க ஆவலாயிருந்தார். அவ்வாறே, அதைப் பலரிடமும் கூறியிருக்கிறார். அதில் அவருக்கு அளவற்ற நம்பிக்கை இருந்தது. சென்ற வருஷம் காந்திஜி 21 நாள் உபவாசம் இருந்தபோது, நண்பர்களும் உறவினர்களும் அவருடைய தேக நிலைமையை எண்ணிக் கவலையுற்றார்கள். ஆனால், கஸ்தூரிபாய் அஞ்சவில்லை. "பயப்படாதீர்கள். அவருக்கு ஒன்றும் நேராது.

ஆண்டவன் முதலில் என்னைத்தான் அழைத்துக்கொள் வான்'' என்றார்.

பின்பு ஒருமுறை, "இந்த ஆகாகான் மாளிகையி லிருந்து, உயிரோடு போவேனென்று எனக்குத் தோன்ற வில்லை'' என்றார். எல்லோரும் திகைத்துப்போனார்கள். அந்தியகாலம் நெருங்குவதை அவர் நன்கு உணர்ந்தார். உடனே, தனக்கென்றிருந்த சில சாமான்களை, தான் இறந்த பிறகு இன்னின்னார் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று ஏற்பாடு செய்ததாகவும் தெரிகிறது. சிறையில் காந்திஜி தம் கைப்பட ஒரு சேலை நெய்து கஸ்தூரிபாய்க்கு அனுப்பியிருந்தார். கஸ்தூரிபாய் அதை உடுத்தாமல் பத்திர மாகப் பெட்டியில் வைத்திருந்தார். மீராபென் காரணம் விசாரித்தபோது, "நான் இறந்த பிறகு, அந்தச் சேலையை உடுத்தி என்னை எடுத்துக்கொண்டு போகவேண்டும்'' என்று கூறினார் கஸ்தூரிபாய்.

**அந்த இரும்பு மனமும் ஒடியலாம்**

துயரத்திற்கு ஓர் எல்லை யுண்டானால், அந்த எல்லையை இன்று காந்திஜி கண்டிருக்கவேண்டும். அவருடைய நம் பிக்கைக்குகந்த மகாதேவ தேசாய் இறந்ததாலுண்டான மனப்புண் இன்னும் ஆறவில்லை. அதற்குள் மனைவியையும் இழந்தார். இன்று சூனியத்தையும் ஏகாந்தத்தையும் தவிர வேறு நண்பர்கள் யாரும் அவருக்கில்லை. அவர் உறுதி யானவர், மனத்தைக் கட்டுப்படுத்தி வைக்கும் திறமை யுடையவர் என்ற போதிலும், இந்தப் பெருவிபத்தை அமைதியாகச் சகிக்க அவரால் இயலுமா என்பது சந் தேகமே. உள்ளேயும் சரி, வெளியேயும் சரி, உலகமெங் கும் ஒரே சோகமயமாய்க் காட்சியளிக்கிறது. பேராசை, கொடுமை என்ற பிசாசுகள் மனித குலத்தை ஆட்டிக் கொண்டு இருக்கின்றன. நண்பர்களும் சக ஊழியர்களும் சிறைக் கம்பங்களுக்குள்ளே கிடந்து வாடுகிறார்கள். பஞ்சமும் பட்டினியும் தேசத்தைக் கொள்ளைகொள்ளு கின்றன. இது வெளியுலகம். உள்ளேயோ, மனப்பூர்வ மாகச் சேவைசெய்யும் உத்தமர் மகாதேவரைப் பறி கொடுத்தார். இப்போது மனைவியையும் இழந்தார். அந்த இரும்பு மனம் இதுவரை ஒடியவில்லையானால் இனி மேலாவது ஒடியலாம்.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால், ஏறக்குறைய இதே நிலைமையில், ஏசுநாதர் ஆண்டவனைப் பார்த்து, "பிதாவே, பரமண்டலத்திலுள்ள பிதாவே, என்னைக் கைவிட்டுவிட்டாயா?" என்று கதறினர். காந்திஜிக்கு அந்த நிலைமை வந்துவிட்டதா? ஆண்டவனிடம் உதவி கோர அவருக்கு உரிமை இல்லையானல் வேறு யாருக்கு உரிமை இருக்கிறது?

**அறியாப் பருவத்தில் மணம்**

அறுபத்திரண்டு வருஷத்துக்கு முன்னால், அதாவது தம்முடைய பதின்மூன்றாம் வயதில் கஸ்தூரிபாய் காந்திஜியை மணந்தார். அவருடைய தந்தை ஒரு பருத்தி வியாபாரி. பெயர் கோகுல்தாஸ் மகன்ஜி. கஸ்தூரிபாய், பெற்றோர்களுக்குச் செல்லக் குழந்தையாக விளங்கினர். அந்தக் காலத்தில், காந்திஜியின் தந்தையும் கஸ்தூரிபாயின் தந்தையும் நெருங்கிய நண்பர்களாய் இருந்துவந்தனர். அந்த நட்பை பலப்படுத்திக்கொள்ளும் முறையில், சம்பந்தம் செய்து கொள்ளுவதென்று இருவரும் முடிவு செய்தனர்.

கத்தியவாரில் மணமுறையில் இருசடங்குகள் உண்டு. முதலில் நிச்சயதார்த்தம் நடக்கும்; அப்புறம் கல்யாணம். நிச்சயதார்த்தம் என்றால் சம்பந்திகள் இருவரும் ஒன்று கூடி, வாய்முறையில் ஓர் உறுதி செய்துகொள்வது. ஆனால், தற்செயலாகப் பையன் இறந்துபோகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள்; பெண் விதவையானதாக ஆகாது. நிச்சயதார்த்தம், முற்றிலும் பெற்றோர்களைப் பொறுத்த விஷயம். பெண்ணுக்கோ, பிள்ளைக்கோ அதில் சம்பந்தமில்லை; அவர்களுக்குத் தெரியவும் தெரியாது. காந்திஜிக்கு மும்முறை நிச்சயதார்த்தம் நடந்தது. அவருக்கு முதலில் பார்த்த இரண்டு பெண்கள் இறந்து போய்விட்டார்களாம். மூன்றாவது முறையாக, 1882-ம் வருஷம் கஸ்தூரிபாய்க்கும் காந்திஜிக்கும் நிச்சயதார்த்தம் நடந்தது. மறு வருஷம் கல்யாணம்.

காந்திஜிக்கும் அவருடைய அண்ணனுக்கும், சிற்றப்பா மகனுக்கும் ஒரே சமயத்தில் கல்யாணம் நடத்தி விடுவதென்று முடிவு செய்தார்கள். பெண் - மாப்பிள்ளையின் விருப்பத்தையோ, வசதியையோ பெற்றோர்கள் கவ

னிக்கவில்லை. சொந்த வசதியையும் சிக்கனத்தையுமே அவர்கள் பார்த்துக்கொண்டார்கள்.

சுமார் பத்து வருஷங்களுக்கு முன், கல்யாணம் என்றால் நம் நாட்டில் ஒரே அமளியாக இருக்கும். குஜராத்தில் சொல்லவேண்டியதே இல்லை. எவ்வளவு பெரிய பணக்காரர்களாய் இருந்தபோதிலும், இரண்டொரு கல்யாணத்திலேயே ஆடம்பரமாகச் செலவுசெய்து விட்டு, மறுபடி தலைதூக்க முடியாமல் போவார்கள். அவர்கள் காலத்தையும் பொருளையும் வீணாக்குவார்கள். துணிமணிகள் வாங்குவதைப்பற்றியும், நகைகள் செய்வதைப்பற்றியும், விருந்து வைப்பதைப்பற்றியும் பல மாதக் கணக்காய் யோசனை செய்வார்கள். செலவில், இரு சம்பந்திகளும் ஒருவரையொருவர் மிஞ்சாதபடி பார்த்துக் கொள்ளுவார்கள். பெண்கள், அவர்கள் குரல் இனிமையாய் இருக்கிறதோ கர்ணகடூரமாய் இருக்கிறதோ, ஒத்திகைக்காகப் பாடிப்பாடி, உடம்பைக் கெடுத்து நோயுற்று, கடைசியில் சொந்தக்காரர்களுக்குத் தொந்தரவு கொடுப்பார்கள்.

இத்தனை குழப்பமும் தொந்தரவும் ஒரே தடவையில் முடிந்தால் நல்லதென்று காந்திஜியின் பெற்றோர்கள் கருதினார்கள். செலவும் குறையும், ஓரளவு சிறப்பாகவும் காரியம் முடியும். காந்திஜியின் தந்தைக்கும், சிற்றப்பாவுக்கும் வயதாயிற்று. பிள்ளைகளுக்குக் கல்யாணம் செய்து பார்க்கவேண்டும் என்று அவர்கள் மிக்க ஆவலாயிருந்தார்கள். இதையெல்லாம் யோசனைசெய்தே, மூன்று பேருக்கும் ஒரே சமயத்தில் கல்யாணத்தை நடத்திவிடுவதென்று முடிவுசெய்தார்கள். வேலைகளும் மும்முரமாக நடக்கத் தொடங்கின.

**மனைவிமேல் அதிகாரம்**

வேலைகள் நடந்த வேகத்தைப் பார்த்தே, காந்திஜிக்கும் அவருடைய சகோதரர்களுக்கும், கல்யாண விஷயம் புரிந்தது. அப்போது அவர்கள் சிறுவர்கள். கல்யாணம் என்றால், முறையாக இன்னதென்று அவர்களுக்குத் தெரியாது. இதைப்பற்றி, காந்திஜீ தம் சுய சரிதையில் பின் வருமாறு கூறுகிறார்:

"நல்ல துணிமணிகள் கிடைக்கும், வாத்தியங்கள் முழங்கும், ஊர்வலங்கள் நடக்கும், விளையாடுவதற்கு ஒரு விநோதமான பெண்ணும் கிடைப்பாள் என்பதைத் தவிர, வேறு ஒருவிதமான எண்ணமும் அப்போது எனக்குத் தோன்றவில்லை."

ஒரு வகையில் கல்யாணம் நடந்தேறியது. காந்திஜிக்கு வெட்கம், அதேமாதிரி கஸ்தூரிபாய்க்கும் வெட்கம். ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ள இருவருக்கும் தைரியமில்லை. அவர் சொல்லுகிறார்: "நான் எப்படி அவளுடன் பேசுவது? அவளிடம் என்ன சொல்லுவது?......ஆனால், இந்த மாதிரியான காரியங்களில் மற்றவர் உதவி தேவையில்லை. நாங்கள் மெல்ல மெல்ல ஒருவரையொருவர் புரிந்துகொள்ளவும், தாராளமாகப் பேசவும் தொடங்கினோம். இரண்டு பேருக்கும் ஒரே வயது. ஆனால், விரைவில் அவள் மேல் அதிகாரம் செலுத்தத் தொடங்கினேன்".

அந்தக் காலத்திலே, ஒரு தம்பிடி இரண்டு தம்பிடி விலையில், சிறு பிரசுரங்கள் வெளியாவதுண்டு. அவற்றில், இளந் தம்பதிகளுக்குப் பல நல்லுரைகள் எழுதியிருக்கும். காந்திஜி அவற்றை வாங்கி ஆவலோடு வாசிப்பார். அதில், தமக்குப் பிடிக்காததை உடனே மறந்துவிடுவார்; பிடித்ததை ஞாபகத்திலேயே வைத்திருந்து, அதை நடைமுறையில் கையாளவும் தொடங்குவார். ஒரு பிரசுரத்தில், கடைசிவரை மனைவியிடம் உண்மையாக நடந்துகொள்ள வேண்டும் என்று எழுதியிருந்தது. அது காந்திஜியின் மனத்தில் நன்கு பதிந்துவிட்டது. அந்தச் சிறு வயதிலிருந்தே, மனைவியிடம் உண்மையாக நடந்துகொள்வதென்று விரதம் பூண்டார்.

ஆனால், அவருக்கு ஒரு சந்தேகமும் உண்டாயிற்று. "நான் மனைவியிடம் உண்மையாக நடந்துகொண்டால் போதுமா? அவளும் என்னிடம் உண்மையாக நடந்துகொள்ள வேண்டாமா?" என்று யோசித்தார். அதிலிருந்து அவருக்குப் பொறுமையுண்டாயிற்று. அந்த நீதியைப் பலவந்தமாக மனைவிக்குப் புகட்டுவதென்று தீர்மானித்தார். மனைவியின் நேர்மையிலோ, கற்பிலோ சந்தேகப்

படுவதற்கு ஒரு காரணமுமில்லை. ஆனால், பொறாமை உண்டான பிறகு காரண காரியங்களை யார் பார்க்கப் போகிறார்கள்? மனைவியின் போக்குவரத்தையும் நடத்தையையும் உஷாராகக் கவனிக்கத் தொடங்கினார். தன்னிடம் அனுமதி வாங்காமல் எங்கும் போகக்கூடாதென்று கட்டளையிட்டார். இருவருக்கும் சண்டையுண்டாயிற்று. காந்திஜியின் உத்தரவு, கஸ்தூரிபாய்க்குச் சிறைத் தண்டனை போலிருந்தது. அந்த உத்தரவுக்குக் கீழ்ப்படிவதில்லை என்று முடிவு செய்தார் கஸ்தூரிபாய். நினைத்த இடத்திற்குப் போய்வரத் தொடங்கினார். அடக்குமுறை அதிகமாக ஆக, அவருடைய சுதந்தரமும் அதிகமாயிற்று. இரண்டு பேருக்கும் மனத்தாங்கல் தோன்றியது. அவர்கள் பல நாட்கள்வரை பேசாமலிருந்தார்கள்.

இது சம்பந்தமாகக் காந்திஜி பிற்காலத்தில் கூறியதாவது: "கோயிலுக்கோ, தோழிகளைப் பார்க்க வெளியிலோ போகக்கூடாதென்று கட்டளையிட்டால், குற்றமற்ற ஒரு சிறுமி அதற்கு எப்படிக் கீழ்ப்படிவாள்? அவளைக் கட்டுப்படுத்த எனக்கு உரிமை இருக்கிறதென்றால், என்னைக் கட்டுப்படுத்த அவளுக்கும் உரிமையிருக்கிறது அல்லவா? இதெல்லாம் இன்று எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆனால், அந்தக் காலத்தில் கணவனுக்குரிய அதிகாரத்தைக் கையாளவேண்டியதாயிருந்தது!

"இதிலிருந்து, எங்கள் இல்வாழ்க்கை வேதனையும் வெறுப்பும் மிக்கதென்று வாசகர்கள் நினைத்துவிடக் கூடாது. ஏனெனில், என்னுடைய கண்டிப்பு அன்பையொட்டியதாகும். அவளை மற்றவர்களுக்கு ஓர் உதாரணமாக்க முயன்றேன். அவள் தூயவாழ்வு வாழவேண்டும்; நான் கற்றதை அவளும் கற்கவேண்டும்; அவள் தன்னுடைய வாழ்க்கையையும் சிந்தனையையும் என்னுடைய வாழ்க்கையில் இரண்டறக் கலக்கவேண்டும் என்பதே என் ஆவல்."

**பிரிந்திருக்க முடியவில்லை!**

சிறு வயதிலிருந்தே அவருக்கு மனைவிமேல் மிக்க அன்பு, பள்ளிக்கூடத்தில் படிக்கும்போதும் மனைவியைப் பற்றியே

நினைத்துக்கொண்டிருப்பாராம். 'எப்போது வெளியே விடுவார்கள்? மனைவியை எப்போது பார்க்கலாம்?' என்று ஏங்குவாராம். இருட்டியதும் அவருக்கு மகிழ்ச்சி உண்டாகும். "அவளை விட்டுப் பிரிந்திருக்க என்னால் முடியவில்லை. இரவு வெகுநேரம் வரை, அவளைத் தூங்கவிடாமல் வம்பளந்து கொண்டிருப்பேன்" என்கிறார் காந்திஜி.

கஸ்தூரிபாய்க்கு எழுதப்படிக்கத் தெரியாது. காந்திஜி அவருக்குக் கற்றுக்கொடுக்க விரும்பினார். ஆனால், பாவம், இளந்தம்பதிகள். கற்றுக் கொள்வதற்கோ, கற்றுக் கொடுப்பதற்கோ அவர்களுக்கு மனமில்லை. வேறு சில இடையூறுகளும் இருந்தன. முக்கியமாக, கஸ்தூரி பாய்க்குப் படிக்க விருப்பமே இல்லை. படிக்கவேண்டும் என்று நினைத்தாலும், பகலில் முடியாது; இரவிலேயே படிக்க வேண்டும். பெரியவர்களுக்கு முன்னிலையில், அவர்கள் ஒருவரை யொருவர் சந்திக்கவோ, பேசவோ முடியாது. தவிரவும், அந்தக் காலத்தில் பெண்கள் வெளியே வருவதில்லை. படுதாமுறை ரொம்பக் கடுமையாக இருந்தது. இந்த மாதிரியாகப் பல இடையூறுகள். இதற்காக, பிற்காலத்தில் காந்திஜி மிகவும் வருந்தியிருக்கிறார். நாற்பது வயதுக்குப் பின், கஸ்தூரிபாய்க்குப் படிப்புக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்று அவருக்கு மீண்டும் ஓர் ஆவல் உண்டாயிற்று. ஆனால், என்ன பயன்? அப்போது அவர் பொது வாழ்க்கையில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அவருக்கு ஓய்வு கிடைக்கவில்லை. ஆசிரியர்கள் மூலம் கல்வி கற்பிக்கவும் அவருக்கு விருப்பமில்லை. அதன் விளைவாக, கஸ்தூரிபாய் கல்வியில் நல்ல தேர்ச்சியடைய முடியவில்லை.

கல்யாணமானபோது, கஸ்தூரிபாய் சிறிய பெண். தொடர்ந்தாற்போல ஆறு மாதத்துக்கு மேல் கணவன் வீட்டில் வாழ்ந்ததில்லை. அந்தக் காலத்திலே, பெண் புருஷனை விட்டு அடிக்கடி பிரிந்து, தாய் வீட்டில் காலங் கழிப்பது வழக்கம்.

சில வருஷங்கள் கழிந்தன. காந்திஜி மேல் படிப்புக்காக இங்கிலாந்து சென்றார். அப்போது கஸ்தூரி பாய்க்கு ஒரு கைக்குழந்தை. நீண்ட காலம் கணவனைப் பிரிந்து வாழ நேர்ந்தது. வேலையும் அதிகம். மாமி சொன்ன

வேலைகளைச் செய்துகொண்டிருந்தார். மாமிக்கு அவர் மேல் மிக்க அன்பு. ஆனால், துரதிர்ஷ்டவசமாக, அவரும் விரைவில் காலமாகிவிட்டார். இப்போது மாமியும் இல்லை. கஸ்தூரிபாய் தன்னந் தனியரானார். 1891-ஆம் வருஷம் காந்திஜி திரும்பி வந்தார். அவர் வந்தும் என்ன? பழைய பொறுமையும் சந்தேகமும் மீண்டும் தோன்றின. சின்னஞ் சிறு விஷயத்திற்குக்கூட மனைவிமேல் எரிந்து விழுந்தார். ஒரு முறை, கஸ்தூரிபாயைத் தாய் வீட்டுக்கு அனுப்பப் போவதாகவும் பயமுறுத்தினார். அந்தப் பேதை, பெரிதும் பணிந்து வேண்டிக் கொண்டதன்பேரில், காந்திஜி மனமிரங்கினார். இதைப்பற்றி காந்திஜி தம் சுய சரிதையில் பின்வருமாறு எழுதியுள்ளார்:

"இந்த மாதிரியான கொடுமைகளை, ஹிந்துப் பெண்ணைத் தவிர, வேறு யாராலும் சகிக்க முடியாது. அதனாலேயே, நான் பெண்களைப் பொறுமையின் வடிவமாகக் கருதுகிறேன். ஒரு பாவமும் செய்தறியாத வேலைக்காரன் மேல் நாம் சந்தேகப்பட்டால், அவன் வேலையை உதறி விட்டுப்போக வழி இருக்கிறது. அதைப்போலவே, தந்தையின் வீட்டை விட்டுச் செல்ல, மகனுக்கு வழியிருக்கிறது. நண்பன், நட்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடலாம். மனைவிக்குக் கணவன் மேல் சந்தேகமுண்டானால், அவள் வாய் பேசாமல் மௌனமாயிருப்பாள்; ஆனால், கணவனுக்கு மனைவிமேல் சந்தேகம் தோன்றி விட்டாலோ, அவள் அடியோடு நாசமானாள் என்று வைத்துக்கொள்ளலாம். அவள் எங்கே போவது? ஹிந்துப்பெண் விவாகரத்துச் செய்துகொள்ள அனுமதி கிடைக்காது. சட்டத்தால், அவளுக்கு யாதொரு பலனுமில்லை. என்னுடைய மனைவிக்கு அத்தகைய நிலைமை உண்டாக்கியதை, நான் ஒரு நாளும் மறவேன்."

காந்திஜி தென்னாப்பிரிக்காவுக்குப் போகும்போது, மனைவியையும் குழந்தைகளையும், உடனழைத்துச் சென்றார். கஸ்தூரிபாய், முதல் முதலாக, ஐரோப்பிய நாகரிகத்தைக் கைக்கொள்ளத் தொடங்கினார். காலுக்கு பூட்ஸ், பார்ஸி முறையில் உடையலங்காரம். அவருக்குச் சங்கடமாகவிருந்தது. ஆனாலும், என்ன செய்வது? காந்தி

ஜிக்கு, அந்தக் காலத்தில் மேல் நாட்டு நாகரிகத்தின் மேல் பற்று அதிகம். அதன் விளைவாக மனைவியும் அதற்கு உட் பட வேண்டியதாயிற்று. சாப்பிடுவதற்குக் கரண்டிகளை உபயோகிக்க நேர்ந்தபோது, கஸ்தூரிபாய் அடைந்த வேதனைக்கு அளவில்லை.

இந்தச் சமயத்தில் காந்திஜியின் மனோநிலைமை வெகு வேகமாக மாறிக் கொண்டிருந்தது. எதிர்காலத் தேசப் பணிக்காக, அப்போதிருந்தே அவர் தயாராகி வந்தார். அதற்கு, கஸ்தூரிபாய் தம்மாலியன்ற ஒத்துழைப்பையும் உதவியையும் அளித்துவந்தார். தம்பதிகளுடைய இல் வாழ்க்கை இன்ப வாழ்க்கையாக மாறியது.

**பொறுமையின் சிகரம்**

தென்னாப்பிரிக்காவில் வக்கீல் தொழில் புரிந்து கொண் டிருந்த காலம்.

காந்திஜியுடன் வேலை பார்த்து வந்த குமாஸ்தாக்கள், ஒவ்வொரு சமயம் அவருடைய வீட்டிலேயே தங்கிவிடு வது உண்டு. காந்திஜி அவர்களைத் தம் உறவினர்களைப் போலவே நடத்தி வந்தார். இது சம்பந்தமாக அவருக்கும் கஸ்தூரிபாய்க்கும் அடிக்கடி விவாதம் நிகழும். குமாஸ் தாக்களில் ஒருவர் ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்.

வீடு மேற்கத்திய முறையில் அமைந்திருந்தது. கழிவு தண்ணீர் வெளியே போவதற்கு அங்கே வசதியில்லை. சிறுநீர் கழிப்பதற்கு, ஒவ்வோர் அறையிலும் ஒரு பானை இருந்தது. அதை, காந்திஜியோ, அல்லது அவருடைய மனைவியோ அலம்புவது வழக்கம். அதற்காக, தோட்டி யையோ வேலைக்காரர்களையோ அவர்கள் தேடுவதில்லை. அவர்களுடன் நன்றாகப் பழகிய குமாஸ்தாக்கள், தங்கள் அறையிலிருக்கும் பானையைத் தாங்களே அலம்பிவிடுவது வழக்கம். ஆனால், அந்த ஹரிஜனக் குமாஸ்தா புதியவர். அவருக்கு விஷயம் தெரியாது. ஆகையால், அவருடைய அறையிலிருந்த பானையை, காந்தி தம்பதிகளே அலம்ப வேண்டியதாக நேர்ந்தது. கஸ்தூரிபாய் மற்ற அறைகளி லிருந்த குடங்களை எல்லாம் அலம்பினர். ஹரிஜனக் குமாஸ் தாவின் அறையிலிருந்த குடத்தைமாத்திரம் அலம்பவில்லை;

அலம்ப முடியாதென்றும் கூறிவிட்டார். இருவருக்கும் சச்சரவு உண்டாயிற்று. அதைப்பற்றி, காந்திஜி தமது சுய சரிதையில் பின்வருமாறு கூறுகிறார்:

"அவளுடைய கோபக்காட்சி இன்னும் என் கண்ணெதிரில் நிற்கிறது. அவளுடைய கண்கள் சிவந்திருந்தன. குடத்தைத் தூக்கிக்கொண்டு கீழே இறங்கும்போது, முத்துப்போன்ற கண்ணீர்த் துளிகள் அவளுடைய கன்னங்களிலிருந்து வழிந்தன. ஆனால், நான் அன்பு நிறைந்த கணவன்தான்; என் அன்பே அவளுக்குக் கொடுமையாய் முடிந்தது. என்னை அவளுடைய ஆசிரியனாக நினைத்துக் கொண்டேன்".

கஸ்தூரிபாய் மனமில்லாமல் ஒரு காரியத்தைச் செய்வதில், காந்திஜிக்கு விருப்பமில்லை. அவருக்குக் கோபம் உண்டாயிற்று. "இந்த மாதிரி அபத்தத்தை எல்லாம் இந்த வீட்டில் சகித்துக் கொண்டிருக்க இனி என்னால் முடியாது" என்று இரைந்தார். இது, நெஞ்சில் அம்பு தைப்பதுபோல் இருந்தது கஸ்தூரிபாய்க்கு. "உங்கள் வீட்டை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்; நான் போகிறேன்" என்றார். காந்திஜிக்கு ஆத்திரம் உண்டாயிற்று. கஸ்தூரிபாயைக் கரகரவென்று இழுத்துக்கொண்டுபோய், வெளியே தள்ளுவதற்காக, கதவைத் திறக்க முயன்றார். கஸ்தூரிபாயின் கண்ணிலிருந்து பொலபொலவென்று கண்ணீர் வழிந்தது. அவர், பரிதாபமான குரலில், "உங்களுக்குக் கொஞ்சங்கூட வெட்கமில்லையா?......நான் எங்கே போவது? என்னை அழைத்து வைத்துக் கொள்வதற்கு, இங்கே தாயார் தகப்பனாரோ, சொந்தக்காரர்களோ இருக்கிறார்களா? நான் உங்கள் மனைவி என்பதற்காக, எல்லா அவமரியாதையையும் சகித்துக் கொள்ளவேண்டுமா? கடவுளின் பொருட்டாகவாவது, நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள். கதவை மூடுங்கள்; வெளியில் யாராவது பார்க்கப் போகிறார்கள்" என்றார்.

**'நிகரற்ற பொறுமை மிக்க என் மனைவி'**

காந்திஜி இவ்விஷயமாக மேலும் தம் சுய சரிதையில் கூறுவதாவது:

"எனக்கு வெட்கம் உண்டாயிற்று. கதவை மூடி னேன். மனைவி என்னைக் கைவிட முடியாதென்றால், நானும் அவளைக் கைவிட முடியாது. எங்களுக்குள் எத் தனையோ முறை சில்லறைச் சச்சரவுகள் நிகழ்ந்திருக்கின் றன. ஆனால், இறுதியில் அவை அமைதியாகவே முடியும். நிகரற்ற பொறுமைமிக்க என் மனைவியே, சண்டையில் பெரும்பாலும் வெற்றியடைவாள்.

"இன்று, ஓரளவு பற்றுதலற்ற முறையில் அந்நிகழ்ச்சி யைக் கூறமுடிகிறது. இன்று நான் கண்மூடித்தன மாகவோ, மோக வெறியுடனோ நடந்து கொள்ளவில்லை. இப்போது, ஆசிரியன் என்ற முறையில் மனைவியிடம் பழகவில்லை. அவள் விரும்பினால், நான் முன்பு அவ ளிடம் வெறுப்பாக நடந்து கொண்டதுபோல், இன்று அவள் என்னிடம் வெறுப்பாக நடந்து கொள்ளலாம். இன்று நாங்கள் அநுபவமிக்க நண்பர்களாய் இருக் கிறோம். ஒருவரையொருவர் காமப் பொருளாய்க் கருதுவ தில்லை. நான் நோயுற்றிருந்த காலம் முழுவதும், ஒருவித மான பரிசையும் எதிர்பார்க்காமல் நன்றியறிதலுடன் சேவை செய்து வந்தாள்."

"இதிலிருந்து, நாங்கள் மற்றவர்களுக்கு உதாரண மான தம்பதிகள் என்றோ, இரண்டு பேருக்கும் ஒரே மாதிரியான லட்சியங்கள் இருக்கின்றனவென்றோ யாரும் முடிவுசெய்து விடலாகாது. தனக்குச் சொந்தமான லட் சியம் ஏதாவது இருக்கிறதா என்பது கஸ்தூரிபாய்க்கே தெரியாது. என்னுடைய காரியங்களில் பலவற்றை, அவள் இன்றுகூட ஒப்புக்கொள்ளாதிருக்கலாம். அதைப்பற்றி நாங்கள் விவாதிப்பதில்லை. விவாதிப்பதில் பயனில்லை என்று நான் கருதுகிறேன். ஏனெனில், அவளுடைய பெற்றோர்களோ, அல்லது நானோ அவளுக்குக் கல்வி யறிவு புகட்டவில்லை. ஆனால், பெரும்பாலான ஹிந்துப் பெண்களுக்கு ஓரளவு அமைந்திருக்கும் ஒருசிறந்த குணம், அவளிடம் அதிகமாக அமைந்திருக்கிறது. அதாவது: விருப் பத்துடனோ விருப்பமில்லாமலோ, மனமறிந்தோ மன மறியாமலோ, என்னைப் பின்தொடர்ந்து வருவதையே தன் பாக்கியமாகக் கருதி வந்திருக்கிறாள். தூய வாழ்வு

வாழ நான் செய்துவந்திருக்கும் முயற்சிக்கு அவள் ஒரு போதும் குறுக்கே நின்றதில்லை. அறிவுத்துறையில் எங்களிருவருக்கும் பெரு வேற்றுமை இருந்தபோதிலும், எங்கள் வாழ்க்கை திருப்தியானது, இன்பமானது, முன்னேற்றமானது என்றே கருதி வந்திருக்கிறேன்.''

கலங்காத உள்ளம்

தென்னாப்பிரிக்காவில் சத்தியாகிரகம் தொடங்கப் போகும் சமயம். கஸ்தூரிபாய் அடிக்கடி நோயுற்று வந்தார். அவர் ஆபரேஷன் செய்து கொள்ளுவது நலம் என்று ஒரு நண்பர் கூறினார். கஸ்தூரிபாய் முதலில் தயங்கியபோதிலும் இறுதியில் ஒப்புக்கொண்டார். ஆபரேஷன் நடந்தது. வலி அதிகமாயிருந்தபோதிலும் அவர் தைரியமாகச் சமாளித்துக் கொண்டார். டாக்டரும் அவருடைய மனைவியும் கஸ்தூரிபாயை மிக்க அன்பாகக் கவனித்து வந்தார்கள். காந்திஜி டாக்டரிடம் விடைபெற்றுக்கொண்டு ஜோகனிஸ்பர்குக்குச் சென்றார்.

சில நாட்களுக்குப் பின் காந்திஜிக்கு ஒரு கடிதம் வந்தது. அதில், கஸ்தூரிபாயின் நிலைமை மோசமாயிருப்பதாகவும், ஒரு முறை அவர் உணர்விழந்து விட்டதாகவும் டாக்டர் எழுதியிருந்தார். காந்திஜியின் அனுமதியில்லாமல் கஸ்தூரிபாய்க்கு மாமிசமோ, மதுவோ கொடுக்கக்கூடாதென்பது அவருக்குத் தெரியும். ஆகையால், அவர் ஜோகனிஸ்பர்குக்கு 'போன்' பண்ணி, மாட்டிறைச்சி கலந்த 'சூப்பு' கொடுக்கலாமா என்று காந்திஜியைக் கேட்டார். அதற்கு காந்திஜி, "கஸ்தூரிபாயின் விருப்பப்படி செய்யுங்கள். அவள் விரும்பினால் நீங்கள் தாராளமாகக் கொடுக்கலாம். இதில், என்னைக் கேட்கவேண்டிய அவசியமேயில்லை'' என்றார். "மருந்து விஷயத்தில், நான் நோயாளிகளைக் கலந்தாலோசிப்பது வழக்கமில்லை. எதற்கும், நீங்கள் உடனே புறப்பட்டு வாருங்கள். சூப்பு அவசியம் கொடுக்க வேண்டும் என்பதே என் விருப்பம். கொடுக்கக்கூடாது என்றால், அப்புறம் உங்கள் மனைவியின் உயிருக்கு நான் பொறுப்பல்ல'' என்றார் டாக்டர்.

மறுநாள் காலை டர்பனுக்கு வந்துசேர்ந்தார் காந்திஜி. டாக்டர் அவரைப்பார்த்ததும், சிரித்துக்கொண்டே, "அவளுக்கு 'சூப்பு'க் கொடுத்துவிட்டேன். என்ன செய்வது?" என்றார்.

காந்திஜி திகைத்துப் போனார். டாக்டர் தம்முடைய அனுமதியில்லாமல் 'சூப்பு'க் கொடுப்பாரென்று அவர் நினைக்கவேயில்லை. ஆகையால், மிக்க வருத்தத்துடன், "டாக்டர், இது நம்பிக்கைத் துரோகம்" என்றார்.

"நோயாளிக்கு மருந்து கொடுப்பதில் நம்பிக்கைத் துரோகம் என்ன இருக்கிறது? பொய் சொல்லி ஏமாற்றுவதன் மூலம் பிழைக்க வைத்துவிடலாம் என்பது தெரிந்தால், எத்தனை பொய் சொல்லுவதற்கும் நாங்கள் அஞ்சுவதில்லை" என்றார் டாக்டர்.

காந்திஜிக்கு வேதனை உண்டாயிற்று. ஆனல் அவர் பொறுமையாயிருந்தார். டாக்டர் அவருக்கு ரொம்பவும் வேண்டியவர். அவரும் அவருடைய மனைவியும் காந்திஜிக்கு மிக்க உதவியாய் இருந்திருக்கிறார்கள். ஆனல், அவருடைய வைத்திய தர்மம் மாத்திரம் காந்திஜிக்குப் பிடிக்கவில்லை.

அவர் டாக்டரை நோக்கி, "சரி, இனி என்ன செய்வதென்று சொல்லுங்கள். அவள் செத்தாலும் சாகட்டும். ஆனல் சூப்புக் கொடுக்கக்கூடாது" என்றார்.

"நீங்கள் சொல்லுவது சரி. ஆனல், கஸ்தூரிபாய் என் பொறுப்பிலிருக்கும் வரை, என் மனத்திற்குப் பிடித்தமான மருந்தையோ உணவையோதான் கொடுப்பேன். உங்களுக்கு விருப்பமில்லையானல், அவளை இங்கிருந்து அழைத்துக்கொண்டு போய் விடுங்கள். என் வீட்டில் அவள் சாவதை நான் பார்த்துக் கொண்டிருக்க முடியாது."

"அப்படியானல், இப்போதே அழைத்துக்கொண்டு போய்விடச் சொல்லுகிறீர்களா?"

"நான் சொல்லுவதைக் குற்றமாக நினைத்துக் கொள்ளாதீர்கள். என்னிஷ்டம்போல மருந்து கொடுக்கிறேன். நான்கைந்து நாளில் குணமாய்விடுவாள் நீங்கள் கொஞ்சங்கூடக் கவலையில்லாமல் இப்போதே ஜோகனிஸ்பர்குக்

குப் போகலாம். ஆனால், இந்தச் சின்ன விஷயத்தில் நீங்கள் பிடிவாதம் செய்வதானால், அவளை இங்கிருந்து அழைத்துக் கொண்டு போவதே நலம்'' என்றார் டாக்டர்.

'மாமிசம் தொடேன்'

காந்திஜி, கஸ்தூரிபாயிடம் சென்று, டாக்டருக்கும் தனக்கும் நடந்த சம்பாஷணை விவரத்தைக் கூறி அவருடைய கருத்தை வினவினார். அவரோ, "நான் சூப்பைத் தொடமாட்டேன். இந்த உலகத்தில் மனிதராய்ப் பிறப்பது அரிது. அருவருப்பான பொருள்களால் உடம்பைத் தீட்டாக்கிக் கொள்ளுவதைக் காட்டிலும், உங்கள் கையிலேயே சாவேன்'' என்று சொல்லிவிட்டார்.

காந்திஜி மிகவும் சொல்லிப்பார்த்தார். ஆபத்திற்குப் பாவமில்லை யென்றும், நோயுற்றிருக்கும்போது சூப்பு அருந்துவது வழக்கமே யென்றும் எடுத்துக் கூறினார். ஆனால், அந்த வீர மாதின் மனம் கொஞ்சமும் மாறவில்லை. "முடியாது. என்னை வேறு எங்காவது அழைத்துக்கொண்டு போங்கள்'' என்று சொல்லிவிட்டார்.

மனைவியின் உறுதியைக்கண்டு அவருக்கு மிக்க ஆனந்தம் உண்டாயிற்று. அவர் டாக்டரிடம் சென்று, "நீங்கள் சொல்லியபடி, அவளை அழைத்துக்கொண்டு போய் விடுகிறேன்'' என்றார். அவருக்குக் கோபமுண்டாயிற்று. "விஷயம் தெரியாதவராக அல்லவா இருக்கிறீர்கள! இந்த மாதிரியான நிலைமையில் அவளை அழைத்துக் கொண்டு போகலாமா? அவள் உடம்பு இருக்கும் நிலைமையைப் பார்க்கவில்லையா? கொஞ்சம் குலுங்கினாலும் ஆபத்தாக முடியுமே! நீங்கள் அழைத்துக்கொண்டு போகும் போது, வழியில் இறந்துபோனால் அதில் ஆச்சரியம் எதுவுமில்லை—'' என்றார்.

ஆனால், காந்திஜி அவருடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தவில்லை. உடனே அங்கிருந்து கிளம்பி விடுவதென்று தீர்மானித்தார். மழை தூறிக்கொண்டிருந்தது. ரயில்வே ஸ்டேஷன் அருகிலேயே இருந்தது. டர்பனிலிருந்து போனிக்ஸுக்கு ரயிலில் செல்லவேண்டும். அப்புறம், அங்கிருந்து இரண்டரை மைல் தூரம் ரஸ்தா வழியே செல்ல

வேண்டும். மிக அபாயமான காரியத்தில் இறங்கினர் காந்திஜி. ஆனல், ஆண்டவனிடம் நம்பிக்கை வைத்தே அதில் முனைந்தார்.

ஒரு ரிக்ஷாவை அழைத்துக் கொண்டுவந்து, கஸ்தூரி பாயை அதில் ஏற்றினர். அவசர அவசரமாக ஸ்டேஷனை நோக்கிச் சென்ருர். கஸ்தூரிபாயைத் தேற்றவோ, உற்சாகமூட்டவோ அவசியம் நேரவில்லை. அதற்கு மாருக, அவர் காந்திஜியை நோக்கி, "எனக்கு ஒன்றும் நேராது. கவலை வேண்டாம்" என்று கூறினர்.

அவர் ரொம்ப மெலிந்து, எலும்புந் தோலுமாய் இருந்தார். ஸ்டேஷன் பிளாட்பாரம் மிகப் பெரியது. ரிக்ஷாவை உள்ளே கொண்டுபோக முடியாது. என்ன செய்வதென்று யோசித்தார் காந்திஜி. கடைசியில் அவரைத் தன் கையாலேயே தூக்கிக் கொண்டுபோய் ரயிலில் படுக்க வைத்தார். போனிக்ஸை அடைந்ததும், அவரை ஒரு கயிற்றுக் கட்டிலில் அமர்த்தி வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனர்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு சாமியார் காந்திஜியின் இல்லத்திற்கு வந்தார். அவர், மாமிசம் சாப்பிடலாம் என்பதற்கு ஆதாரமாக மனுஸ்மிருதியிலிருந்து சில பகுதிகளை வாசித்துக் காட்டினர். காந்திஜிக்கு இது பிடிக்காவிட்டாலும், மரியாதைக்காகப் பேசாமல் இருந்தார். ஆனல், கஸ்தூரிபாயின் உறுதியோ அசைக்க முடியாததாய் இருந்தது. அவரைப் பொறுத்தவரையில், மத கிரந்தங்கள், மூடி சீல்வைத்த நூல்கள். அவர் சாமியாரைப் பார்த்து, "சுவாமி, நீங்கள் என்ன வேண்டுமானலும் சொல்லலாம். ஆனல் சூப்பு சாப்பிட்டு உயிர் பிழைக்க எனக்கு விருப்பமில்லை. தயவுசெய்து, அனவசியமாகத் தொந்தரவுபடுத்திக் கொள்ளாதீர்கள். நான் சாப்பிடப் போவதில்லை" என்று உறுதியாகச் சொல்லிவிட்டார்.

நெருப்புடன் வாழ்க்கை

காந்திஜி அரசியலில் மாத்திரமா புரட்சிக்காரர்? குடும்பத்திலும் வீட்டிலும் புரட்சிக்காரர். அவருடன் வாழ்க்கை

நடத்துவதென்பது இலகுவான காரியமல்ல என்பது கஸ்தூரிபாய்க்கு அல்லவா தெரியும்! காந்திஜியின் அஹிம்சா தத்துவத்தை, கிட்ட நெருங்கிப் பார்த்தால், நிரம்பக் குழப்பமானதாகவும் சிக்கலானதாகவும் தோன்றும். அவருடைய அற்புதமான 'சத்திய சோதனை'களுக் கெல்லாம் முதலில் இலக்கானவர் கஸ்தூரிபாய். அதில் அவர் வெற்றியுடன் வெளிவந்தார்.

ஒருமுறை கஸ்தூரிபாய் கொஞ்சம் பணம் சேர்த்து வைத்திருந்தார். தம் பேரப்பிள்ளைகளுக்கோ அல்லது தம் அன்பிற்குகந்த இதர குழந்தைகளுக்கோ வளையல் கிளையல் வாங்கிப்போடலாம் என்று அவர் நினைத்திருக்கலாம். ஆனல், ஆசிரமவாசிகள் யாரும் பணம் வைத்திருக்கக் கூடாது என்பது விதி. கஸ்தூரிபாய் வைத்திருந்த பணம் எப்படியோ தவறிப்போயிற்று; அல்லது, யாராவது எடுத்துக் கொண்டிருக்கலாம். அவருக்கு மிக்க வருத்தம். ஆனல், திருட்டைப்பற்றி யாரிடமும் வாய்திறப்பதற்கு பயம். இது காந்திஜிக்குத் தெரிந்தது. அவர் தம் மனைவியைத் திருத்த முயன்ருர். "நீ பேசாமலிரு, திருடனை நான் கண்டுபிடித்து விடுகிறேன்" என்ருர் காந்திஜி.

மறுநாள் அவர் ஆசிரமவாசிகள் அனைவரையும் வரவழைத்து, அவர்கள் முன்னிலையில் கூறினர் :

"இந்த ஆசிரமத்தில் வாழும் நாம் எல்லோரும் வறிஞர்களாகவே வாழ்வதென்றும், சொத்து சுதந்தரம் எதுவும் வைத்துக் கொள்ளுவதில்லை என்றும் விரதம் பூண்டிருக்கிரேம். ஆனல், இதுவரை நமக்குள்ளேயே நாம் ஒரு திருடனை வைத்திருந்திருக்கிரேம். ஒரு சிறு திருட்டுப் போயிருக்கிறது. நாம் அந்தத் திருட்டை விசாரிக்கவேண்டும்"—

சற்று நேரம் கழிந்தது. அவர் மேலே என்ன சொல்லப் போகிருர் என்பதை ஆசிரமவாசிகள் ஆவலாக எதிர்பார்த்தார்கள். காந்திஜி சிரித்துக்கொண்டே, "குற்றவாளியை நான் கண்டுபிடித்துவிட்டேன். அவனை உங்களுக்குக் காட்டுகிறேன்........கஸ்தூரி, எழுந்து நில்" என்ருர். எல்லோரும் திகைத்துப் போனர்கள்.

காந்திஜி மேலும் கூறியதாவது: "இந்த ஆசிரமத்தில் பணம் வைத்திருப்பதைத் திருட்டுத்தனத்துக்குச் சமமாக நாம் நினைக்கிறோம். கஸ்தூரி பணம் வைத்திருந்தாள். ஆகையால், அவள் திருட்டுக் குற்றம் புரிந்திருக்கிறாள். அவள் திருடியதுமல்லாமல், மற்றொருவரைத் திருடச் சொல்லித் தூண்டும் முறையில் பணம் வைத்திருந்தாள். ஒரு குற்றம் மட்டுமல்ல, இரண்டு குற்றம் செய்திருக்கிறாள்..........."

காந்திஜி மிக்க கண்டிப்பானவர் என்பது தெரிந்த விஷயம். உற்றினர்களிடமும் நண்பர்களிடமும் மாத்திரமே சட்டதிட்டங்களைப் பலமாகக் கையாளுவார். ஒரு முறை ஆசிரமத்தில் ஒருவர் திடீரென்று நோயுற்றார். ஆனால், அது கஸ்தூரிபாய்க்குத் தெரியாது. தெரியும்படி செய்ய விரும்பினார் காந்திஜி. ஒருநாள் பிரார்த்தனை முடிந்த பின் காந்திஜி சொன்னார்: "தேவதாஸ் நோயுற்றானென்றால், அது உனக்கு உடனே தெரியும். மற்றவர்கள் உடம்பு அசௌகரியம் என்று படுத்தால் உனக்கு எங்கே தெரியப்போகிறது?" என்றார். கஸ்தூரிபாய் வெட்கமடைந்தார்.

**நகைகளை மறுத்தார்**

காந்திஜி தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குப் புறப்படத் தயாரானார். அவருக்குப் பலர் பிரிவுபசாரங்கள் நடத்தினார்கள்; விலையுயர்ந்த பொருள்களைச் சன்மானமாக வழங்கினார்கள். தங்கம் வெள்ளி நகைகள் ஏராளமாகக் குவிந்தன. ஆயிரக்கணக்கில் பெறுமானமுடைய வைரங்களையும் பரிசாக அளித்தார்கள்.

அவைகளை ஏற்றுக்கொள்ளுவதா, என்ன என்பது பற்றி காந்திஜிக்கு ஒன்றும் விளங்கவில்லை. பொது வாழ்க்கையில் ஈடுபட்டவர்கள் யாதொருவிதமான பரிசையோ நன்கொடையையோ பெறுவது சரியல்ல என்பது காந்திஜியின் கருத்து.

பரிசுவந்த பொருள்களுள் கழுத்துச் சங்கிலியும் ஒன்று. அது கஸ்தூரிபாய்க்காகக் கொடுக்கப்பட்டதாகும். அதன் பெறுமானம் ஏறக்குறைய ஆயிரம் ரூபாய் இருக்கும்.

அன்றிரவு முழுவதும் காந்திஜிக்குத் தூக்கம் பிடிக்க வில்லை. திண்ணையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிய வாறிருந்தார். அவருடைய மனத்தில் குழப்பம் மிகுந்தது. என்ன செய்வதென்று அவருக்குப் புரியவில்லை.

வீட்டில் விலையுயர்ந்த நகை எதுவும் கிடையாது. தம் பதிகள் இருவரும் எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். ஆடம்பரம் என்றால் அடியோடு வெறுத்தார்கள். அப்படி யிருக்கும்போது, தங்க நகைகளையும் வைர மோதிரங்களை யும் வைத்துக்கொண்டு என்ன செய்வார்? நகைப் பைத்தி யத்தை அடியோடு விட்டொழிக்க வேண்டுமென்று நேற்றுவரை பிரசாரம் செய்துவந்தவர் அவர்.

காந்திஜி வெகு நேரம் வரை யோசித்துப் பார்த்தார். கடைசியில், அவற்றைத் தம்மிடம் வைத்துக் கொள்ளுவ தில்லையென்று முடிவுசெய்தார். எல்லாவற்றையும் பொதுக் காரியத்துக்கு உபயோகப்படுத்துவதென்று தீர்மானித் தார். காலையில் எழுந்ததும் மனைவியிடம் தம் கருத்தைச் சொன்னார்.

அப்போது கஸ்தூரிபாய்க்குக் கொஞ்ச வயது. நகை மேல் ஆசை நீங்காத பருவம். சங்கிலியைத் திருப்பிக் கொடுக்க மறுத்துவிட்டார். அவர் அழுதார், வாதாடிப் பார்த்தார். குழந்தைகளுக்குக் கல்யாணமாகும்போது, மருமகளின் கழுத்தில் போடுவதற்காவது இருக்கட்டும் என்று சொல்லிப் பார்த்தார். ஆனால், காந்திஜி விடவில்லை. “இந்தக் குழந்தைகள் வளர்ந்து கல்யாண வயதடையும் போது தெரியாதா? அதற்கு இப்போதிருந்தேயா தயார் செய்யவேண்டும்” என்றார், கேலியாக. “ஆம்” என் றார் கஸ்தூரிபாய். “மருமகள் கேட்கும்போது வாங்கிக் கொடுத்து விடுகிறேன்” என்றார் காந்திஜி. கஸ்தூரி பாய்க்கு ஆத்திரம் உண்டாயிற்று. “வாங்கிக் கொடுப் பீர்களே! நன்றாய் வாங்கிக் கொடுப்பீர்கள்!! உங்கள் சேதி எனக்குத் தெரியாதா, என்ன? இப்படிச் சொல்லிச் சொல்லி, என்னையும் வெறுங் கழுத்தாக்கி விட்டீர்கள். இனி மருமகளுக்கு வாங்கிக் கொடுக்கப் போகிறீர்களோ, மருமகளுக்கு!—அது சரி, அந்தத் தங்கச் சங்கிலி எனக்கு

வந்ததல்லவா? அதைத் தொட உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?" என்றார்.

"ஆனால், அது உன்னுடைய சேவைக்காகக் கொடுத்ததா, என்னுடைய சேவைக்காகக் கொடுத்ததா?"

"அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் செய்த சேவைக்காகவே கொடுத்தார்கள். ஆனால், நான் ஒன்றும் செய்யவில்லையா? இரவு பகலாக நான் உங்களுக்கு உழைக்கவில்லையா?"

கஸ்தூரிபாய் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். ஆனால், காந்திஜி அதைப் பொருட்படுத்தவே இல்லை. கடைசியில் அவை பொதுச் சொத்தாயின.

**சேவையில் ஆர்வம்**

காந்திஜி தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகம் தொடங்கப்போகும் சமயம் சட்டமறுப்புச் செய்வதற்காகச் சில பெண்களைத் தேர்ந்தெடுக்க விரும்பினார். அவருக்குத் தெரிந்த பெண்கள் பலர், அவருக்கு உறவினர்களாகவும் இருந்தனர். காந்திஜி சிறைக்குப் போகச் சொன்னால், அவர்கள் உடனே போவார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், அவர்கள் மனப்பூர்வமாகப் போகவேண்டுமே யொழிய, தாம் சொன்னதற்காகப் போகக்கூடாது என்பதில் அவர் பெருங் கவலை கொண்டார். தவிரவும், உறவினர்களைச் சிறைக்குப்போகச் சொன்னால் அவர்கள் கடைசிவரை சிறையிலிருந்து எல்லாத் துன்பங்களையும் அனுபவிப்பார்களா, அல்லது நடுவிலேயே மன்னிப்புப் பெற்றுக்கொண்டு வந்துவிடுவார்களா என்பதைப் பற்றியும் யோசித்தார். ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

பக்கத்து வீட்டுக்குப்போய் அங்கிருந்த சில பெண்களிடம் விஷயத்தைக்கூறி, அவர்களுடைய விருப்பத்தையும் கேட்டார். அவர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டனர். தண்டனைக் காலம் முடியாமல் வெளிவருவதில்லையென்று உறுதியும் அளித்தனர். ஜன்னல் வழியே எல்லாவற்றையும் ஒற்றுக் கேட்டுக்கொண்டிருந்த கஸ்தூரிபாய்க்குக் கோபமுண்டாயிற்று. காந்திஜி திரும்பிவந்ததும்,

"என்னிடம் சொல்லக் கூடாதா? அவர்களைக் காட்டிலும் நான் எந்த வகையில் குறைவு? சட்டமறுப்புச் செய் வதற்கு நான் தகுதியற்றவளா?" என்று துயரத்துடன் வினவினர்.

"உனக்குத் தொந்தரவு கொடுக்க எனக்கு விருப்ப மில்லை. தவிரவும், என்னைத் திருப்தி செய்யவேண்டும் என்பதற்காக நீ சிறை செல்லுவதும் சரியல்ல. இந்த மாதிரியான விஷயங்களில் அவரவர்களே யோசித்து ஒரு முடிவுக்கு வருவதுதான் நல்லது. மற்றவர்கள் வற்புறுத்த லுக்காக ஒரு காரியம் செய்யக் கூடாது. தண்டனையை அனுபவிப்பதற்குரிய சக்தி உனக்கு இருக்கிறதா என் பதை யோசி" என்று, காந்திஜி பட்டும் படாததுமாகக் கூறினர்.

"தண்டனையை அநுபவிக்க முடியாமல் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வெளியே வந்தால், நீங்கள் என் முகத்தி லேயே விழிக்க வேண்டாம். நீங்கள் கஷ்டத்தைச் சகித் துக்கொள்ள முடியும் என்ருல், நானும் சகித்துக்கொள்ள முடியும். இந்தச் சத்தியாகிரகத்தில் நான் கட்டாயம் கலந்துகொள்ளத்தான் போகிறேன்."

காந்திஜி சிரித்துக்கொண்டார்.

"அப்படியானல், உன்னையும் சேர்த்துக்கொள்ளத் தான் போகிறேன். ஆனல், மறுபடியும் சொல்லுகிறேன். எதற்கும் நன்ருக யோசித்துக்கொள்."

"யோசிக்கவேண்டியதே இல்லை. நன்ருக யோசித்தே இந்த முடிவிற்கு வந்திருக்கிறேன்."

**பெண் தளபதி**

கெய்ரா ஜில்லாவிலுள்ள பார்ஸாத் நகரத்திலிருந்து ஓர் அவசரத் தந்தி வந்தது.

குளிர்காலம். காலை நேரம். மாரோலி கிராமத்தில் ஒரு மண் குடிசையில் கஸ்தூரிபாய் இருந்தார். தந்தியை வாசித் துப் பார்த்தார். "உடனே வருக" என்று பார்ஸாத் பெண்மணிகள் அழைத்திருந்தனர்.

அரசியல் வானிலே கருமேகங்கள் குமுறிக்கொண்டிருந்த காலம் அது. தலைவர்கள் எல்லோரும் சிறைக் கம்பங்களுக்குள்ளே தவம் புரிந்து கொண்டிருந்தனர். ஆனால், போராட்டம் நடந்தவாறிருந்தது. தொண்டர்கள் பலர் அடிபட்டு ஆஸ்பத்திரிக்கோ அல்லது சிறைச் சாலைக்கோ போய்க்கொண்டிருந்தனர். பம்பாயில் ஆஸாத் மைதானத்தில் நடந்த தடியடிப் பிரயோகத்தின் விளைவாக நூற்றுக்கணக்கான வாலிபர்களின் மண்டைகள் உடைந்தன. பார்ஸாத் நகரத்தில் நடந்த பெண்கள் கூட்டத்தைப் போலீசார் கண்மூடித்தனமாய்த் தாக்கியதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருந்தது. அங்கு தாக்குண்ட பல பெண்கள் அபாயகரமான நிலைமையிலிருப்பதாகச் செய்திகள் பரவின. உடனே வரும்படியாக, கஸ்தூரிபாய்க்கு பார்ஸாதிலிருந்து தந்தி வந்தது.

தந்தி கிடைத்ததோ இல்லையோ, கஸ்தூரிபாய் சாப்பாட்டை அரைகுறையாக முடித்துக்கொண்டு எழுந்தார். வேண்டிய சாமான்களை அவசர அவசரமாக எடுத்து வைத்தார். அவர் அடுத்த ரயிலிலேயே பார்ஸாதுக்குப் போக விரும்பினர். "மௌனமாகப் போலீசாரை எதிர்த்து நின்ற அந்த வீரப் பெண்மணிகளை நான் பார்க்க வேண்டும். அங்கே போய் அவர்களுக்கு உற்சாகமூட்ட வேண்டும். பாபு (காந்திஜி) இருந்தால், அவர்களுக்கு ரொம்பவும் ஆறுதலாயிருக்கும். ஆனால், என்ன செய்வது, அவர் சிறைச்சாலைக்குள்ளே யல்லவா இருக்கிறார்" என்று சொல்லிக்கொண்டார். தனக்குத் தெரிந்த அரைகுறை குஜராத்தி மொழியில் பத்திரிகைகளுக்கு ஓர் அறிக்கை விடுத்தார். அதில், தடியடிப் பிரயோகத்தைக் கண்டிப்பதாகவும் பார்ஸாத் மாதர் போராட்டத்தில் ஆண்டவன் உதவுவாரென்றும் கூறியிருந்தார். இரண்டொரு மணி நேரத்திற்குள், எல்லோரும் அதிசயிக்கும் முறையில் பார்ஸாதுக்குப் பயணமானர்.

அன்று போர்முனைக்குப் புறப்பட்ட கஸ்தூரிபாய் முற்றிலும் புதியவராகத் தோன்றினர். அவ்வளவு உற்சாகத்தை, அதற்கு முன் வேறு யாரும் அவரிடம் கண்டதில்லை. எளிய மண் குடிசையில், யாருக்கும் தெரியாமல்

பலமணிநேரம் ராட்டை நூற்றுக்கொண்டிருந்தவர், ஒரு பெரிய தளபதிபோல அங்குமிங்கும் விரைந்து சென்று, நிலைமையைக் கவனித்துத் தொண்டர்களுக்கு ஆலோசனை கூறிவந்தார். அவர் பார்ஸாதுக்கும் அதைச் சுற்றியுள்ள நூற்றுக்கணக்கான கிராமங்களுக்கும் போய், போராட்டத்திற்கு வேண்டியன செய்துவந்தார். அவரைப் பார்த்துத் தொண்டர்கள் அதிசயித்தார்கள். காந்திஜியே புதிய வடிவில் வந்துவிட்டதுபோலத் தோன்றியது அவர்களுக்கு. காலையிலிருந்து மாலை வரை ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் அவருக்கு வேலை. உள்ளூர்த் தலைவர்களைச் சந்திக்க வேண்டும்; போராட்ட நிகழ்ச்சிகளை விசாரிக்கவேண்டும். பத்திரிகைகளுக்கு அறிக்கைகள் வெளியிட வேண்டும். ஆஸ்பத்திரிகளில் கிடக்கும் சத்தியாகிரகிகளைப் பார்த்து அவர்களுக்கு ஆறுதல் கூறவேண்டும். காந்திஜியின் நிலைமையிலிருந்து அவ்வளவு வேலையையும் பார்ப்பது எளிதல்ல. ஆனால், கஸ்தூரிபாய் அதில் ஒரு குறையும் வைக்கவில்லை.

### ஓய்வைக் கண்டறியாத உத்தமி

"வேலை அதிகம். உடம்பு ஒத்துக்கொள்ளாது. ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். இல்லாவிடில் ஆபத்து நேரும்" என்று டாக்டர்கள் பயமுறுத்திப் பார்த்தனர். ஆனால் அவர் சற்றும் அஞ்சவில்லை. "எனக்கு ஒன்றும் நேராது. இது சாதாரணமான வேலை. இந்த மாதிரியான வேலைபார்க்கும் பாக்கியம் எப்போதாவது ஒருமுறைதான் எனக்குக் கிடைக்கிறது. அதை நான் நழுவ விடுவதா? இப்போது ஓய்வைப் பற்றி நினைப்பது பாவம்" என்றார்.

எங்கு போனாலும் எங்கு தங்கினாலும், ஆசிரம நியதிகளை ஒழுங்காகக் கையாள அவர் தவறுவதே இல்லை. காலையில் நான்கு மணிக்கே எழுந்து விடுவார். கீதையில் சில பகுதிகளைப் பாராயணம் செய்வார். அவருக்கு கீதை முழுவதும் மனப்பாடம்.

கீதா பாராயணத்தின்போது,பழைய விஷயங்கள் அவருக்கு ஞாபகம் வரும். "பள்ளிக்கூடத்திற்குப் போகாதது ரொம்ப வருத்தமாய் இருக்கிறது. நான் பாபுவைக் கல்யாணம் செய்துகொண்டபோது, எனக்கு ஒன்றுமே தெரி

யாது. அவர் எனக்குக் கற்றுக்கொடுக்க விரும்பினார். ஆனால், நான் ரொம்ப மெதுவாகப் படித்து வந்தேன். எனக்குப் படிப்பில் ஆசையில்லாததை நினைத்து அவர் வருந்துவார். என்ன செய்வது? பத்திரிகைக்காரர்கள் அறிக்கை கொடுக்கும்படி தொந்தரவு படுத்துவார்கள் என்பது தெரிந்திருந்தால், அந்தக் காலத்திலேயே படித்திருப்பேன்'' என்பார்.

அவருக்கு காந்தியத்தின் முக்கியமான தத்துவங்கள் நன்கு தெரியும். அதைக் கிராமவாசிகளுக்கு எளியமுறையில் விளக்கி வந்தார். குஜராத் குடியானவர்களிடம் கஸ்தூரிபாய்க்கு அளவற்ற செல்வாக்கு இருந்து வந்தது. பர்தோலியில் அவர் போகாத கிராமமோ, கண்டுபேசாத காங்கிரஸ் ஊழியர்களோ கிடையாதென்று சொல்லலாம். குடியானவர்கள் கூட்டங்கூட்டமாகச் சென்று அவரிடம் தங்கள் குறைகளைக் கூறுவார்கள். காந்தி இர்வின் ஒப்பந்தம் கையெழுத்தான சமயம், அவர் சுற்றுப்பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அப்போது, ஒரு கிழக் குடியானவன் அவரிடம் சென்று, ''பாபு எங்களை மறந்துவிட்டார் போலிருக்கிறது. வரிகொடா இயக்கத்தில் சேர்ந்த குஜராத் குடியானவர்களுக்கு காந்தி இர்வின் ஒப்பந்தத்தில் ஒரு நிவாரணத்தையும் காணோமே'' என்றான். கஸ்தூரிபாய் சிரித்துக்கொண்டே, ''வருத்தப்படாதே, அப்பா! தேசத்தின் நன்மைக்காகவே பாபு பாடுபடுகிறார். அவர் உன் கஷ்டத்தைப் போக்குவார். அவரிடம் சொல்லி உனக்கு வேண்டியதைச் செய்யச் சொல்லுகிறேன்'' என்று தாய்மையன்புடனும் அனுதாபத்துடனும் கூறினார்.

### கிராம சேவை

சம்பரான் ஏழை மக்களுக்கு எழுத்தறிவு புகட்டும் வேலையில் கஸ்தூரிபாய் அரிய சேவை செய்தார்.

கிராமவாசிகளுக்கு எழுத்தறிவு புகட்டவேண்டும்; கல்வி புகட்டாமல் செய்யும் இதர வேலைகளால் யாதொரு பலனுமில்லை, என்பதை காந்திஜி கண்டுகொண்டார். தம் சகாக்களைக் கலந்து ஆலோசித்த பிறகு ஆறு கிராமங்களில் பாடசாலைகள் தொடங்குவதென்று தீர்மானித்தார்.

ஆனால், ஆசிரியர்கள் கிடைக்கவில்லை. செலவுக்கு மாத்திரம் சிறு ஊதியம் பெற்றுக்கொண்டு சேவாமுறையில் வேலை பார்க்க உள்ளூரில் யாரும் அகப்படவில்லை. காந்திஜி பொதுமக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். அதற்கு நல்ல ஆதரவு கிடைத்தது. ஆண் பெண்கள் பலர் முன் வந்தனர். பெரும்பாலான பெண்களுக்குத் தட்டுத்தடங்கலாகவே எழுதப்படிக்கத் தெரியும். கஸ்தூரிபாய்க்கோ அதிலும் தடவல். ஆனால் காந்திஜி அதைரியமடையவில்லை. ஒன்றும் செய்யாமலிருப்பதைக் காட்டிலும் ஏதாவது செய்வது மேல் அல்லவா? ஆகையால், பெண்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்கும்படி அவர்களை அனுப்பி வைத்தார்.

பிஷஹர்வா என்பது ஒரு சிறிய கிராமம். ஒருமுறை காந்திஜி அங்கு போயிருந்தபோது, அங்குள்ள பெண்கள் பலர் அழுக்குப்படிந்த உடைகளை அணிந்திருக்கக் கண்டார். அவர் கஸ்தூரிபாயை அழைத்து "எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தால் போதுமா? சுத்தமாயிருக்கக் கற்றுக்கொடுக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

மறுநாள் கஸ்தூரிபாய் ஒரு வீட்டுக்குப்போய் அங்கிருந்த பெண்ணை அழைத்து "சுத்தமாய் இருந்தால் என்ன, அம்மா? சேலை அழுக்கானால் துவைத்துக்கட்டிக் கொள்வதுதானே!" என்றார். அந்தப் பெண் கஸ்தூரிபாயை உள்ளே அழைத்துக் கொண்டுபோய், "பார் அம்மா, இங்கே அலமாரியோ பெட்டியோ ஒன்றும் கிடையாது, வேறு சேலையைப் பூட்டிவைப்பதற்கு. உடுத்தியிருக்கிற சேலையைத்தவிர வேறுசேலை எனக்குக் கிடையாது. நான் எப்படித்துவைத்துக் கட்டுவது? காந்திஜியிடம் சொல்லி எனக்கு ஒரு சேலை வாங்கிக்கொடு, அம்மா. அதற்கப்புறம் நான் தினம் துவைத்துக் குளிக்காவிட்டால் சொல்லு" என்றாள்.

கஸ்தூரிபாய் தம் கணவரிடம் சொல்லி, அந்தப் பெண்ணுக்கு ஒரு சேலை வாங்கிக் கொடுத்தார் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

### மனத்தை உருக்கும் அறிக்கை

சம்பாரன் சத்தியாகிரகத்தின்போது அவர் காந்திஜிக்கு வலது கையாக விளங்கினர். 1923-ம் வருஷம் காந்திஜி சிறை புகுந்தபோது, அவர் தேசத்துக்கு விடுத்த வீர வாசகம், நம்மவர்களுடைய மனத்தை விட்டு இன்னும் நீங்கியிராது. அது வருமாறு:

"என் அன்பார்ந்த சகோதரர்களே, சகோதரிகளே, என் கணவருக்கு ஆறு வருஷ தண்டனை கிடைத்திருக்கிறது. இது ஓரளவு என் மனத்தைக் கலக்கிய போதிலும், தண்டனையைக் குறைக்கத்தக்க அதிகாரம் நம் கையிலில்லையென்பதை உணர்ந்தபோது, ஆறுதலடைந்தேன். இந்தியா விழித்தெழுந்து, காங்கிரசின் நிர்மாணத் திட்டங்களை மேற்கொள்ளுமானல், நாம் அவரை இலகுவில் விடுவிக்கலாம்..............ஆகையால், வழி நம்மிடமே இருக்கிறது. அதில் நாம் தோல்வியடைந்தால் குற்றம் நம்முடையதே".

ராஜகோட்டை சத்தியாகிரகம் ஆரம்பமானபோது, தள்ளாத வயதில் முதல் முதலாகச் சிறை சென்றவர் அவரே. கடைசி முறையாக அவர் சிறை சென்றது, 1942-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 9-ஆம் தேதியன்று. காந்திஜியையும் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களையும் கைது செய்த பம்பாய் சர்க்கார், பிர்லா மாளிகையில் தங்கியிருந்த கஸ்தூரிபாயையும் பியாரிலாலையும் சுசீலா நாயரையும் கைதுசெய்து கொண்டுபோய் ஆகாகான் மாளிகையில் கைதிகளாய் வைத்தார்கள்.

### அந்திய காலம்

சென்ற வருஷம் செப்டம்பர் மாதத்திலிருந்தே கஸ்தூரிபாய்க்கு நோய் உண்டாயிற்று. முதிய வயதில், சிறை வாசத்தைத் தாங்குவதற்குரிய மனேதிடமோ உடல் வலுவோ அவருக்கு இல்லை. அவர் பலமுறை சிறைவாசம் செய்திருக்கிறர். ராஜகோட்டில் தன்னந் தனியாகச் சில காலம் சிறையிலிருந்தார். அப்போது அவர் உயிர் தப்பியது ஆச்சரியம். ஆனல், கடைசிச் சிறைவாசத்தைத் தாங்க அவரால் முடியவில்லை. அவருடைய மனமும் உடலும் ஏக

காலத்தில் நலியத் தொடங்கின. ஆகாகான் மாளிகை பாதாள இருட்குகை போலத் தோன்றியது. போதாக் குறைக்கு, சிறையைச் சுற்றியிருந்த இரும்பு முள்வேலி கள், மற்றும் காவலாளிகள் முதலியவை அவருடைய மனோ வேதனையையும் உடல் நோயையும் அதிகரித்தன.

மீண்டும் சிவகிராமத்துக்குப் போய், அங்குள்ள குடிசையில் அமைதியாக வாழ விரும்பினர். கால வரை யறை இல்லாத சிறைவாசம் அவருடைய வேதனையைப் பெருக்கியது. சிறையில் பல வசதிகள் கிடைத்தபோதிலும் அவருடைய மனம் அமைதியுறவில்லை. ஆயிரக்கணக்கான வர்கள் சிறையில் துன்புறுவதைக் காண அவரால் இயல வில்லை. "மற்றவர்கள் விடுதலையடைவதானல், நானும் காந்திஜியும் கடைசி வரை சிறையிலிருக்கத் தயாராய் இருக்கிறோம்" என்று சென்ற ஒன்றரை வருஷ காலமாக அவர் மௌனமாகப் பிரார்த்தனை செய்துவந்தார்.

சாகும்வரை, ஒரு முறையாவது அவர் உணர்விழந்த தில்லை. அவருடைய தேக நிலைமை மோசமாயிருப்பதாக பிப்ரவரி மாதம் 20-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை செய்தி வெளியாயிற்று. அப்போதும், எப்படியாவது அபாயத்தி லிருந்து நீங்கி உயிர்தப்பி விடலாம் என்று அவர் உறுதி யாகக் கருதினர். இருதயம் தளர்ந்ததால், சிறுநீர்த் தொல்லை உண்டாயிற்று. ரத்த ஓட்டம் குறைந்தது. நிமோ னியா தோன்றியது.

திங்கட்கிழமையன்று டாக்டர்கள் கையை விரித் தனர். கஸ்தூரிபாய் பிழைப்பார் என்ற நம்பிக்கை அவர் களுக்கு இல்லை. அவர் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு இருந்தார். நண்பர்களும் உறவினர்களும் செய்த பணி விடைகளின் விளைவாக, மேலெழுந்தவாரியாக அவருக்கு ஓரளவு குணம் உண்டானதுபோலத் தோன்றியபோதி லும் விசேஷ மாறுதல் எதுவுமில்லை. அன்றிரவு டாக்டர் கள் எதிர்பார்த்ததற்கு மாருக அவர் உயிர்வாழ்ந்தார்.

இரவில் அவருக்குப் பாதி நினைவு இருந்தது. கேட்ட கேள்விகளுக்குச் சம்பந்தமில்லாமல் பதில் சொல்லி வந் தார். ஒருமுறை காந்திஜி அவருடைய படுக்கையருகே சென்ருர். அப்போது, கஸ்தூரிபாய் கையை உயர்த்தி,

"அது யார்?" என்று கேட்டார். காந்திஜி அரை மணி நேரம் அவரருகிலேயே இருந்தார். கஸ்தூரிபாய்க்கு ஆறுத லுண்டாயிற்று.

காந்திஜி, அன்னை கஸ்தூரியின் அருகே நின்றிருந்த போது, பல வருஷம் வயதில் குறைந்தவரைப்போலத் தோன்றினர். ஆனல், அவருடைய கைகள் மாத்திரம் நடுங்கிக்கொண்டிருந்தன. அந்தக் காட்சி, முப்பத்திரண்டு வருஷங்களுக்கு முன் தென்னப்பிரிக்காவில் நிகழ்ந்த சம் பவம் ஒன்றை நினைவுறுத்தியது. அப்போது, கஸ்தூரிபாய் சிறையிலிருந்து வெளிவந்த சமயம். அவருடைய தேக நிலைமை சீர்குலைந்திருந்தது. மெலிந்திருந்தார். அப்போது, ஓர் ஐரோப்பியர் காந்திஜியின் வீட்டுக்கு வந்திருந்தார். அவர் கஸ்தூரிபாயைப் பார்த்ததும், "காந்தி, இது யார்? உங்கள் தாயாரா?" என்று வினவினர்.

'போய் வருகிறேன்'

விடிந்தது. திங்கட்கிழமை. அவர் பிழைப்பார் என்ற நம்பிக்கை ஏறக்குறைய மறைந்தது. செவ்வாய்க்கிழமை யன்று காலை அவர் முகமலர்ச்சியுடன் இருந்தபோதிலும், நோயின் கடுமை குறையவில்லை. எதையும் உட்கொள்ள மறுத்தார். கங்கா தீர்த்தத்தைப் பருகுவதற்கு மாத்திரம் வாய் திறந்தார்.

பிற்பகல் மூன்றுமணி. தன் அன்பிற்குரிய இளைய மகன் தேவதாஸை அருகில் அழைத்து "நான் போகிறேன். என்றாவது ஒருநாள் போகத்தானே வேண்டும். இன்றே ஏன் போகக்கூடாது?" என்றார்.

தேவதாஸ் அவரைத் தன் கையில் தாங்கிக்கொண் டிருந்தார். அன்னை, மேலும் சில அன்புமிக்க வார்த்தை களைக் கூறிவிட்டு, மகனுடைய அணைப்பிலிருந்து விலகிக் கொண்டார். அவர் கூறிய வார்த்தைகள் ஒவ்வொன்றும் வெண்கல மணியைப்போல ஒலித்தன. அதில் தாயன்பு மிகுந்திருந்தது.

அவர் திடீரென்று யாருடைய உதவியுமன்றியில் எழுந்து உட்கார்ந்தார். இரு கைகளையும் உயரக் கூப்பி,

பல நிமிஷநேரம் பிரார்த்தனை செய்தார். "ஆண்டவனே, எனக்கு அடைக்கலம் வேண்டும். என் மீது கருணை காட்டும்" என்றார். அந்த வார்த்தைகள் தேவ கானம்போல எதிரொலித்து வானை நோக்கிச் சென்றன. எல்லோருடைய கண்ணிலிருந்தும் நீர் தாரை தாரையாக வழிந்துகொண்டிருந்தது. தேவதாஸ் கண்ணைத் துடைத்துக் கொள்வதற்காக வெளியே சென்றார்.

மாலை ஐந்து மணி.

கல்கத்தாவிலிருந்து விமான மூலம் பென்ஸிலின் மருந்து வந்துசேர்ந்தது. ஆனால், அதை உபயோகிக்க டாக்டர்கள் விரும்பவில்லை. பலன் ஏற்படாதென்று அவர்கள் கருதினார்கள். தேவதாஸ் மீண்டும் உள்ளே போய் அன்னையைப் பார்த்தார். கஸ்தூரிபாயின் முகத்திலே முறுவல் உண்டாயிற்று.

விமானமூலம் வந்த மருந்தில் தேவதாஸுக்கு நம்பிக்கை இருந்தது. அவர் டாக்டர்களைக் கலந்து ஆலோசித்தார். அந்த மருந்தை உபயோகித்துப் பார்க்க அவர்கள் இசைந்தார்கள். ஆனால், பலன் ஏற்படுமா என்பதைப் பற்றி உறுதிகூற அவர்கள் மறுத்தனர்.

ஊசி போடுவதற்கு தேவதாஸ் சம்மதித்துவிட்டார் என்ற செய்தி காந்திஜிக்கு எட்டியது. அவர் தேவதாஸை அழைத்து, "நீ எவ்வளவு அற்புதமான மருந்தைக் கொண்டு வந்தாலும் இனிப் பயனில்லை. நீ செய்வது தவறு. இரண்டு நாளாக உன் தாயார் தண்ணீர்கூடக் குடிக்கவில்லை; மருந்து சாப்பிடவுமில்லை. இப்போது அவள் ஆண்டவன் கையில் இருக்கிறாள். நீ தலையிடலாம். ஆனால் நீ போகும்வழி சரியல்ல. சாகப்போகும் சமயத்தில் உன் தாயாருக்கு அனாவசியமாக ஏன் வேதனை கொடுக்கிறாய்?" என்றார். தேவதாஸ் ஊசிபோடும் முயற்சியைக் கைவிட்டார்.

* * * *

அன்று மாலை 7-35க்கு, அந்திப்பொழுது இரவைக் கண்டு அஞ்சி ஓடிக்கொண்டிருக்கும் நேரத்தில், வானில் இரண்டொரு நட்சத்திரங்கள் மாத்திரம் தன்னந்தனியே நின்று ஒளி கொடுத்துக் கொண்டிருக்கும் சமயத்தில்,

ஏகாந்தம் மிகுந்திருந்த ஆகாகான் மாளிகைக்குள்ளே எமன் நுழைந்தான். ஏறக்குறைய அரை நூற்றாண்டு வரை காந்திஜிக்கு வாழ்க்கைத் துணைவியாய் இருந்துவந்த கஸ்தூரிபாய் கண்ணை மூடினார்.

தலைமாட்டருகே காந்திஜி அமர்ந்திருந்தார். அருகில் உறவினர்கள் இருந்தார்கள். மூத்த மகன் ஹீராலாலும் இளைய மகன் தேவதாஸும் வாடிய முகத்துடன் அன்னையை நோக்கிக் கொண்டிருந்தார்கள். மீராபென், டாக்டர் சுசிலா நாயர், ஜயப்பிரகாஷின் மனைவி பிரபாவதி முதலியோரும் அன்னையின் சேவையில் ஈடுபட்டிருந்தனர். சாவதற்கு அரைமணி நேரத்திற்கு முன், கஸ்தூரிபாயின் சகோதரர் கதாதர்தாஸும் அங்கு வந்து சேர்ந்தார்.

எங்கும் ஒரே அமைதி நிலவுகிறது.

அவருடைய உடல் பருக்கிறது. கைகால்கள் தளருகின்றன. மூச்சுவிடுவது சிரமமாகிறது. அருகில் அமர்ந்திருந்த காந்திஜி மெல்லிய குரலில் “கஸ்தூரி, உன்னுயிர் வெளியே போகத் துடிக்கிறது போ, ஆண்டவனிடம் போய்ச் சேர்” என்றார். அப்போது கஸ்தூரிபாயின் முகத்திலே ஓர் அமைதி உண்டாயிற்று. சென்ற நாற்பது ஆண்டுகள்வரை இல்லற சுகபோகத்தை உதறியெறிந்த காந்திஜி, மனதிலுள்ள அன்பை வெளியே காட்டிக்கொள்ளாத காந்திஜி, அன்னை கஸ்தூரியின் தலையைத் தூக்கித் தன் மடியிலே வைத்து அவருடைய கூந்தலைத் தன் விரல்களால் கோதினார். இன்னும் சற்று நேரத்திற்குள் அவர் பிரியப் போகிறார் என்பதை காந்திஜி அப்போதுதான் உணர்ந்தார் போலும்.

**பதில் இல்லை**

இரண்டு நிமிஷம் கழிந்திருக்கும். எல்லோரும் கஸ்தூரிபாயைப் பார்த்தவாறு இருந்தார்கள். திடீரென்று அவர் முகம் இருண்டது. கண் மூடிக் கண் திறப்பதற்குள் அவருடைய ஆவி பிரிந்தது. உடனே பலருடைய கண்ணிலிருந்தும் நீர் பெருகியது. காந்திஜி கண்ணீரை அடக்கிக் கொண்டார். எல்லோரும் எழுந்து நின்று, அன்னைக்குப்

பிடித்தமான பக்திப் பாடல்களைப் பாடினார்கள். 'ரகுபதி ராகவ ராஜாராம்' என்ற கோஷம் துயர கீதமாக ஒலித்தது. கஸ்தூரிபாயின் ஆன்மாவும் பஜனை யொலியும் ஒருங்குசேர்ந்து மறைந்தன. அப்புறம், அப்புறம்......... மிகவும் துயரமான சேதி.........காந்திஜி தம் மனைவியின் கன்னத்தைத் தடவியவாறு "கஸ்தூரி" "கஸ்தூரி" என்றார். ஆனால், ஒரு பதிலும் கிடைக்கவில்லை...........

அன்று மாலை தந்திகள் பறந்தன. "கஸ்தூரிபாய் காந்தி ஆகாகான் மாளிகையில் காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்" என்ற செய்தியை பம்பாய் சர்க்கார் வெளியிட்டார்கள்.

அப்புறம், புனா நகரம்—என், தேச முழுவதுமே துயரத்தில் மூழ்கியது.

கஸ்தூரிபாய் காலமான செய்தி புனாவில் பரவியதும், பெரும்பாலோர் அதை நம்பவில்லை. டிசம்பர் நாலாம் தேதியிலிருந்தே அவருக்கு உடம்பு குணமில்லை என்பதும் அவர் மாரடைப்பால் அவதிப்படுகிறார் என்பதும் பிழைப்பது அரிது என்பதும் மக்களுக்குத் தெரியும். ஆனாலும், திடீரென்று வெளியான அச்செய்தியை நம்ப அவர்களால் முடியவில்லை. அது நடக்க முடியாத காரியம் என்று அவர்கள் கருதினார்கள்.

மறுநாள் காலை.

மலர்க்குவியலிலே புதையுண்டு, மௌனமாகத் தூங்கிக் கொண்டிருந்த கஸ்தூரிபாயின் அருகில் காந்திஜி உட்கார்ந்திருந்தார். உறவினர்கள் ஒவ்வொருவராக வந்து, கடைசி முறையாகக் கஸ்தூரிபாய்க்கு வந்தனை வழிபாடு செய்தனர். கஸ்தூரிபாயின் அன்பிற்குரிய ஓர் இளம் பெண், பம்பாயிலிருந்து அவசர அவசரமாக வந்தவள், உள்ளே நுழைந்து கஸ்தூரிபாயின் சவத்தை ஒருமுறை நோக்கினாள். மறுமுறை, ஓவென்று அலறியவாறு காந்திஜியின் பாதங்களில் விழுந்து தேம்பித் தேம்பி அழுதாள். துக்கத்தால் வெந்து புழுங்கிக் கொண்டிருந்த காந்திஜி, அவளுக்கு ஆறுதல் கூறும் முறையில் அவளைத் தடவிக் கொடுத்தார்.

**விசித்திரமான நிலைமை**

இச்சமயத்தில் கனம் சாஸ்திரியார், கேல்கர் முதலியோர் ஆகாகான் மாளிகைக்குச் சென்றனர். மனைவியின் அருகிலிருந்த காந்திஜி, எழுந்துபோய் அவர்களை ஆலிங்கனம் செய்துகொண்டார். எல்லோரும் துக்கத்தில் ஆழ்ந்தனர். காந்திஜி அவர்களைப் பார்த்து, “வாழ்க்கையிலே, இத்தகைய விசித்திரமான நிலைமையில் நாம் சந்திக்க வேண்டியிருக்கிறது, பார்த்தீர்களா?” என்றார். அவ்வார்த்தைகளில் அடங்கியிருந்த பொருளை நினைத்து நினைத்து எல்லோரும் மனமுருகினர்,

முதலில் காந்திஜி பாடையைத் தூக்கினார். பின்பு, மற்றவர்கள் அவரைப் பின்பற்றினார்கள். நூறு கஜதூரம் நடந்தார்கள். அங்கே மகாதேவ தேசாய்க்காக, காந்திஜி தம் கையாலேயே கட்டிய சமாதி இருந்தது. கூட்டம் அங்கு நின்றது. எல்லா மதத்தினரும் அங்கு கூடியிருந்தனர். ஸ்ரீமதி மீராபென் பைபிளிலிருந்து ஒரு கீதத்தை வாசித்தார். டாக்டர் கில்டர் பாரசீக மத நூலிலிருந்து ஒரு பகுதியை வாசித்தார். திருக்குரானை மற்றொருவர் ஓதினார். இறுதியில், மகாதேவ தேசாய்க்கு அந்திமக் கிரியைகள் செய்த அதே பிராமணர், முகத்தில் துயரக்குறி ததும்ப முன் வந்து, கஸ்தூரிபாய்க்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்தார்.

காந்திஜி, எரிக்கும் வெயிலில் கடைசிவரை நின்றிருந்தார். இறுதியில், “கோவிந்தா, கோவிந்தா” என்ற கோஷம் நாற்புறமும் எழுந்தது. அன்னையின் அன்பிற்குரிய தேவதாஸ் சிதையில் நெருப்பை மூட்டினார். தீ பற்றி எரிந்தது. நூற்றுக்கணக்கான நண்பர்களும் உறவினர்களும் நெருப்பை நோக்கியவாறு அமைதியாக நின்றிருந்தனர்.

காலை பத்து மணியிலிருந்து மாலை நான்கு மணி வரை, அந்த இடத்திலேயே நின்றிருந்தார் காந்திஜி. “போய் சற்று இளைப்பாறுங்கள்” என்று அருகிலிருந்த ஒரு நண்பர் கூறினார். அதற்கு காந்திஜி, “என்ன, அதற்குள்ளா போகச் சொல்லுகிறீர்கள்? கஸ்தூரி என்ன நினைப்பாள்? ‘இத்தனை வருஷகால உறவை இவ்வளவு சீக்கிரத்திலா

மறந்து விட்டீர்கள்' என்று கேட்கமாட்டாளா?" என்றார்.

* * *

வேத காலத்தில் வாழ்ந்த ததீசி முனிவரை தியாகமணி என்று சொல்லலாம். அசுரர்களுக்குத் தலைவனான விருத்திரன் தேவர்களை ஒடுக்கி தேவேந்திரனுக்குப் பல இன்னல்களை விளைவித்து வந்தான். இந்திரன் பலமுறை அவனோடு போர்தொடுத்தும் வெற்றியடையவில்லை. அசுரனுடைய மாய்கைக்கு முன் அவனுடைய முயற்சிகள் பலிக்கவில்லை. இறுதியில் அவன் பெரியோர்களைக் கலந்தாலோசித்தான். தூய உள்ளம் படைத்தவரும், பாவம் செய்தறியாதவருமான ஒரு மகானின் முதுகெலும்பைக் கொண்டுவந்து, அதை ஓர் ஆயுதமாகச் செய்து எதிரிமேல் ஏவினால், அவன் அழிவது திண்ணம் என்று தேவகுரு ஆலோசனை கூறினார். அத்தகைய ஒரு பெரியாரைக் கண்டு பிடிப்பதற்காக இந்திரன் பூலோகமெங்கும் சுற்றியலைந்து, கடைசியில் ததீசி முனிவரையடைந்து, அவரிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். அவர் மனமுவந்து, தன் முதுகெலும்பைத் தேவர்கோனுக்குத் தானமாக வழங்கினார். இந்திரன் அதை வஜ்ராயுத வடிவில் மாற்றி, விருத்திரன்மேல் ஏவி, வெற்றிகண்டான்.

அன்னை கஸ்தூரி, ததீசி முனிவரைப்போல உலக வாழ்விலிருந்து ஒதுங்கித் தன்னந்தனியே இருந்து தவமியற்றவில்லை. பெரிய முனிவரென்றோ மகான் என்றோ பெயர் எடுக்கவில்லை. அவர் எளிய களிமண்ணிலிருந்து தோன்றியவர். பல்லாயிரக்கணக்கான தாய்மார்கள் தோன்றி இத்துர்பாக்கிய நாட்டை அலங்கரித்தது போல, அவரும் சாதாரணமான முறையிலேயே தோன்றினார். அவருடைய தாயார் வாழ்ந்ததைப்போல, தாயின் தாய் வாழ்ந்ததைப்போல அமைதியாக, மௌனமாக வாழ்ந்தார்.

ததீசி தன் முதுகெலும்பை அளித்து இந்திரனுக்கு வெற்றி கொடுத்ததைப்போல, அன்னை கஸ்தூரியின் அன்பும் பதிபக்தியும் வஜ்ராயுத வடிவம் பெற்று காந்திஜிக்குத் துணைபுரியுமாக.

# புதிய சீனு

"உலகத்திலேயே பகைவருக்கு நகைமுகங்காட்டி, நல்வரவு கூறி, அவர்களைத் தங்களிடம் ஐக்கியப்படுத்திக்கொண்டு விடுகிற சக்திவாய்ந்த தாய்மார் இருவர், வாழ்க பாரதமாதா! வாழ்க சீனத் தாய்!

இந்தியாவும் சீனுவும், பூமிதேவியின் மூத்த பெண்கள்; இரட்டைக் குழந்தைகள். இவ்விருவரும் அழியாத கன்னியர்; குன்றாத வனப்பினர். குறையாத வளத்தினர். இவர்கள், எத்தனையோ நாடுகளுக்கு நாகரிகப் பால் புகட்டினார்கள்; எத்தனையோ இடங்களுக்கு ஞான விளக்கை ஏந்திச் சென்றார்கள். நாகரீகத்தையும் ஞானத்தையும் மட்டுமா கொண்டு சென்றார்கள்? இல்லை, இல்லை; உணவையும் உடையையும் கூடக் கொண்டு சென்றார்கள். மற்றவர்களுடைய வந்தனத்தையோ நன்றியையோ எதிர்பார்த்து இவர்கள் இங்ஙனம் செய்யவில்லை; தங்கள் கடமையாகக் கருதியே செய்தார்கள்.

இன்று உலகத்தில் சத்தியமென்றும், தருமமென்றும் பேசப்படுகிறதென்று சொன்னால், அவை யாவும் இந்த இரண்டு நாடுகளிலிருந்து பிறந்தவைதான். யந்திர நாகரிக வெறி முற்றியுள்ள இந்த இருபதாவது நூற்றாண்டிலே மேற்படி சத்தியத்திற்கும் தருமத்திற்கும் மதிப்பு வைத்துப் பேசுவது இந்த இரண்டு நாடுகளுந்தான். சத்தியத்தையும், தருமத்தையும், தாங்கள் கவசமாக அணிந்து கொண்டிருக்கிற வரையில் தங்களுக்கு அழிவே கிடையாது என்ற திடமான நம்பிக்கையுடனிருப்பதும் இந்த இரண்டு நாடுகளுந்தான்.

ஆனால்—இந்த ஆனால் என்ற வார்த்தையை நாம் மிகுந்த மனவேதனையுடனேயே உபயோகிக்கிறோம்—இவ்விரண்டு நாடுகளும் எவ்வளவுக்கெவ்வளவு அமைதியிலேயே இன்பம் துய்த்து வந்தனவோ, துய்க்கும் ஆற்றல் பெற்றிருந்தனவோ அவ்வளவுக்கவ்வளவு யுத்தச் சுழலில் அகப்பட்டுக்கொண்டு அமைதியை இழந்து நிற்கின்றன. இப்படி அமைதியை இழந்து நிற்கின்ற காலத்திலும், ஒன்றுக்கொன்று அநுதாபத்தோடு பார்த்துக் கொள்கின்றன. இரண்டு நாடுகளுக்கும் பரம்பரையான தொடர்புண்டல்லவா? நெருங்கிய நட்பு உண்டல்லவா? உயிருக்காகப் போராடிக் கொண்டிருக்கும் சீனுவே! உரிமைக்காகப் போராடிவரும் இந்தியா, தனது மனப்பூர்வமான அநுதாபத்தை உனக்குத் தெரிவிக்கிறது."

இப்படி "புதிய சீனு" புத்தகத்தில் சர்மாஜி ஆரம்பிக்கிறார்.